உ

# ஸ்ரீ யூகிமுனிவர்

அருளிய

# பூரணம் - 100.

இது
சித்த ஆயுள்வேத வைத்தியர்
**செங்கல்பட்டு சுவாமியார்**
**C. இராஜரத்தின முதலியார்**
அவர்களால்
பல ஏட்டுப் பிரதிகளுக்கிணங்கப்
பரிசோதிக்கப்பெற்று
**மங்கலம்-ஷண்முக முதலியாரால்**
பதிப்பிக்கப் பெற்றது.



சென்னை, கோமளேசுவரன்பேட்டை,
**அம்பாவிலாச புத்தகசாலை.**
1928

# யூ கி மு னி

# பூரணம்—100

## காப்பு.

1. ஒத்தையாங் கொம்புடைய கணேசன் பாதம்
ஓதரிய சிவனுடைய பாதம் போற்றி
நித்தியமாய் நிறைந்தவுமை பாதம் போற்றி
நினைவில்வைத் தனுதினமுந் துதியே செய்து
சித்திபெற்றார் நாதாக்கள் பாதம் போற்றி
சித்தருட வடிதனையே சிறக்க வாழ்த்தி
நத்தியே பூரணத்தைச் சுருக்க மாக
நலமாக நானாகப் பாடி னேனே.

## நூலுபதேசக் கிரமம்.

2. பாடினேன் சிவன்றானு மம்மைக் கோதப்
பதிவான வம்மைமன மகிழ்ந்து நோக்கி
வாடியே அசுவனிக்குச் சொன்ன போது
வடிவான அசுவனியுங் கேட்டுத் தானே
நாடியே விசுவனிக்குச் சொன்னா ரையா
நலமாக விசுவனியுஞ் சந்தோ ஷித்துத்
தேடியே நந்திக்குச் சொன்ன போது
திடமாக நந்திமன மகிழ்ந்த வாறே.

3. வாறுகேள் நந்தியவர் மகிழ்ந்து நோக்கி
வடிவான தன்வந்திரி களிக்கச் சொன்னார்
கூறுகேள் தன்வந்திரி மனம கிழ்ந்து
குணமாக அகஸ்தியர்க்குக் கருவைச் சொன்னார்

நாறுகேள் அகஸ்தியரு மனம கிழ்ந்து
நலமான புலத்தியர்க்கு நன்மை சொன்னார்
நீறுகேள் புலத்தியருந் தேர்ந்து பார்த்து
நிஜமாகத் தேரையர்க்குச் சொன்னார் தானே. 7

வழலை.

4. தானென்ற தேரையருஞ் சந்தோ ஷித்துத்
தாட்டிகமா யூகிமுனி தன்னை நோக்கி
வானென்ற வடநூலி லுள்ள வற்றை
வரிசையாய்ச் சொல்லிவிட்டார் யூகி தானும்
தேனென்ற தமிழ்க்கிரந்தந் தன்னி லேதான்
தெளிவாக ஆதியோ டந்த மாகப்
பானென்ற வழலைதனைச் சுருக்க மாகப்
பதிவாக நாலுகப் பாடி னாரே. 8

சவுக்கார வழலை.

5. பாடினேன் சவுக்கார வழலை கேளு
பதிவாகப் பெருநூலில் கைபா கத்தைக்
கூடியே சொல்லவில்லை பூர ணத்தில்
குணமாக வழலைதன்னை விரிவாய்ச் சொன்னேன்
தேடியே யிந்நூலைத் தெளிந்து பாரு
திடமாக வழலையென்ற பொருளு மாகும்
நாடியே கைபாக வரிசை யாகும்
நாதாந்த வழலையிது நலமி தாமே. 9.

6. ஆமென்ற சவுக்கார வழலை தன்னை
அறைகிறே னட்லாங் கோடி வித்தை
நாமென்ற பூநீறு பதக்கு வாரி
நலமான சுண்ணாம்பு பதக்குக் கூட்டி
காமென்ற அமுரிபடி யெட்டு வூற்றிக்
கலக்கியே மூன்றுநாள் காய வைத்துக்

தாமென்ற தெளிவிறுத்து நல்லெண்ணெய் தானும்
தண்மையாய்ப் படியெட்டு கூட்டு வாரே.

7. வார்த்துமே சவுக்காரந் தன்னி லேதான்
வடிவாகக் காரமுதல் முறிந்து போகும்
நார்த்துமே காரத்தைக் கட்டக் கட்ட
நல்மாக முறியுமட்டும் காரங் கூட்டு
பார்த்துமே பாலாக முறியு மட்டும்
பதிவாக விட்டுநீ தெளிவி றுத்துக்
கூர்த்துநீ காய்ச்சிடவே வெண்ணெ யாகும்
குணமாகச் சவுக்கார வுண்டை பண்ணே.

8. உண்டைமே லேந்துசுன்னம் பதிவாய்க் கட்டி
புலரவே ரவிதனிலே காய வைத்து
நண்ணியே பத்தெருவிற் புடத்தைப் போட்டு
நலமாக வெடுத்துப்பார் சவுக்கா ரந்தான்
உன்னியே கடுமையாய்ச் சுன்ன மாகும்
உறுதிமெத்த சுன்னத்தால் வேதை கோடி
துன்னியே சவுக்காரம் பலமெ டுத்துத்
துடியாகக் கல்வத்தி லிட்டுக் கேளோ.

சவுக்காரச் சுன்னத்தைத் துருசுக்குக்கவசமிட்டுத்
துருசுச்சுன்னம் செய்து வேதையாட.

9. இட்டுமே வெண்கருவா லரைத்துத் தானும்
இதமாக வரைத்துமே துருசின் மேலே
கட்டியே கதிர்படவே காய வைத்துக்
கனிவாகக் குக்குடத்திற் போடச் சுன்னம்
நட்டுமே சாறுவராத் தழைபி லிட்டு
நலமாகக் *காய்ச்சியே பிழிந்து பாரு
வட்டுமே சாருகும் ஜலத்தைத் தானும்
வடிவாக விட்டுநீ காண்டி தானே.

* கசக்கி என்றும் பாடம்.

## சூதம் கட்டி வேதை.

10\. தானேதான் காண்டிதனி விட்டு நீயும்
 தாட்டிகமாய்ச் சூதத்தை விட்டுக் காய்ச்சு
நானென்ற சூதமது கட்டிப் போகும்
 நலமாகச் சரக்கெல்லா மிதிலே சாரும்
பானென்ற மெழுகாகும் சிந்தூ ரந்தான்
 பாய்ச்சலா மொருகோடி வித்தை யப்பா
வானென்ற வித்தையினால் தங்கங் கோடி
 வடிவாகக் கைப்பாக மாகப் பாரே.

## அயச்சேம்பு - கெந்தகத் தைலம்.

11\. பார்க்கவே அயச்செம்பு சொல்லக் கேளு
 பலகாலம் வைத்துநீ ஜீவ னத்தை
ஏற்கனவே செய்துநீ யுண்டு டுத்தி
 யிதமாக ஞானவழி யடுத்துப் பாரு
காக்கவே சொல்லுகிறேன் கருணை யாகக்
 கனிவாகக் கைப்பாக வரிசை யாக
வார்க்கவே வழலையது கைப்பா கந்தான்
 வடிவாகச் சொல்லுகிறேன் வண்மை யாமே.

12\. வண்மையாய்ச் செவ்வல்லிப் பூச்சார் தானும்
 வடிவாகப் படியொன்று சட்டி யிட்டு
உண்மையாய் வெண்காரச் சுண்ணம் பண்ணி
 உரவாகப் பலமிரண்டு கூடக் கூட்டிக்
தண்மையாய்ச் செவ்வல்லிப் பூச்சார் தன்னைத்
 தாட்டிகமாய் விட்டுநீ கலக்கித் தானே
வெண்மையாய்ப் பார்த்திடவே கரைந்து போகும்
 விருப்பமாய் நல்லெண்ணெய் கூட விட்டே.

13\. விட்டுநீ யெண்ணெயது முறியு மட்டும்
 விதமாகப் பால்போலே முறிந்த தானால்
கட்டுமே கெந்தியது பலமு நான்கு
 கனிவாகப் பாகிலே போட்டு நன்றாய்

விட்டுநீ யெரித்திடவே கெந்தி தானும்
விதமாக முறிந்துதான் தைல மாகும்
நட்டுமே தைலத்தின் வேதை கோடி
நலமாகக் குருகோடி நடத்தை பாரே.

பாருமே தைலத்தை யிறுத்துக் கொண்டு
பதிவாகத் தைலமது பலமு மைந்து
காருமே அரப்பொடியும் பலமு மைந்து
கணக்காகத் தைலத்திற் போட்டு நன்றாய்
வாருமே கொதியிட்டு வொட்டக் காய்ச்சி
வடிவாகக் குகையிலிட் டுருக்கி னுக்கால்
சாருமே வெள்ளிபொன்போல் கண்விட் டாடும்
சரியாக வேதையிதிற் றன்மை யாமே.

ஆமேதா னயமுமது உருகிற் றானு
லாடலாம் வேதையிதி லனேகங் கோடி
தாமேதா னயமுருகில் கெந்தி செம்பைத்
தானிழுக்கு மதுதானும் வழலை யாலே
நாமேதாம் சொல்லிவிட்டோம் பூர ணத்தில்
நன்றாக வாதத்தைக் குறுக்கி நூறில்
வாமேதான் சுருக்கமா யிந்த நூலில்
வடிவாகச் சவுக்கார வழலை தானே.

தானென்ற விந்தநூல் தன்னி லேதான்
தப்பாமல் வழலையத னெண்ணெய் வாங்க
நானென்ற முன்னூலில் நானூறு தன்னில்
நலமாகச் சொல்லவில்லை யென்று சொல்லிக்
கானென்ற விந்தநூல் நூறு தன்னில்
கனிவாகச் சொல்லிவிட்டேன் கருணை பாரு
பானென்ற முன்னூருக்கு மயத்தை நீயும்
பதிவாகச் சேரொன்று நிறுத்துக் கொள்ளே.

17. கொள்ளவே நிறுத்துநீ தூர வைத்துக்
குணமாகச் சொல்லுகிறேன் குவிந்து கேளு
மெள்ளவே பூரணத்திற் சொன்ன மார்க்கம்
மேன்மையாய்ச் செம்புதனைக் கொல்லச் சொன்
துள்ளவே செம்புதனைக் கொன்றெடுத்துத் [னேன்
துடியாக முன்னுருக்கு மயத்திற் சேரு
நள்ளவே முன்தைல மதிலே விட்டு
நலமாக வொட்டயெரி நடத்தை தானே

21.

## மிருதார்சிங்கிச் சிந்தூரம்.

18. தானேதா னெரித்துமே பதமா கத்தான்
தாட்டிகமா யுருக்கிடவே சத்து மாகும்
பூனேதான் சத்திதன்னைப் புறம்பாய் வைத்துப்
புண்ணியமாய் மிருதார சிங்கி யோடே
நானேதான் காரீய மிடையே சேர்த்து
நலமாக வரைத்துநீ அமுரி யாலே
வானேதான் புடம்போட்டு எடுத்துக் கொண்டு
வடிவான துருசதுவு மிடையே சேரே.

22.

19. சேர்த்துநீ அமுரியா லிருஜா மந்தான்
செம்மைபட வாட்டியே வில்லை தட்டிப்
பார்த்துநீ ரவிதனிலே காயப் போடு
பதிவாகப் பத்தெருவிற் புடத்தைப் போடு
காத்துநீ சிங்கியது வெட்டை யாகும்
கனிவாக முன்சத்தி லிடையே சேர்த்து
நாத்துநீ பத்தெருவிற் புடத்தைப் போடு
நலமாகச் சிவந்தநிற மாகுந் தானே.

20. ஆகுமே விதையெடுத்துக் காரங் கூட்டி
அடைவாக வுருக்கிடவே செம்பு மாகும்
ஏகுமே யிச்செம்பு தங்கம் போலாம்
இதமாக வெட்டிரண்டு வெள்ளி தன்னில்

பாகுபெறச் சேர்த்துருக்க மாற்று மெட்டு
பதிவாக விதைவிற்றுச் செலவு செய்து
தாகுமே யுண்டுடுத்தி ஞான யோகம்
தப்பாதே பார்த்திடவே சித்தி யாமே.

வழலைவிவரம் வாதம் - முதற்காண்டம்
பார்க்க - காயசித்தியாகும்.

1. சித்திபெறச் சவுக்கார விபர மெல்லாம்
சின்மயத்தி னருளாலே யிந்த நூலில்
முத்தியாய்ச் சொல்லிவிட்டேன் முதற்காண் டத்தில்
முனிவாகக் கொஞ்சந்தான் வழலை தன்னை
நத்தியே கைபாக வரிசை கண்டால்
நலமாகக் காயசித்தி நல்ல தாகும்
புத்தியா யிவ்வுலகில் வாத மார்க்கம்
புகலரிய வெல்லாமும் பெருமை யாமே.

சவுக்கார எண்ணெயால் வர்ணமுண்டாகும்.

2. ஆமேதான் சவுக்காரத் துள்ளே யெண்ணெய்
அடைவாகப் புகுந்தாக்கா லனேக வித்தை
நாமேதான் வழலையில்லா வாத மெல்லாம்
நாட்டாது வர்ணமது ஏறி டாது
வாமேதா னெண்ணெயது வாத மாகும்
வடிவான சவுக்கார முறிந்த தானால்
தாமேதான் வர்ணமிக வாகும் பாரு
திராட்டிகமா யிதையறியச் சித்தி தானே.

வாதியின் தன்மை.

காணவே வழலைவிட்டோன் வாதி யல்ல
கனிவாகக் கைபாகங் கண்டோன் வாதி
ஊணவே வுருவாக வொன்று மில்லை
உத்தமனே பார்த்திடவே சித்தி சித்தி

பேணவே பெண்ணுறையை விட்டோன் வாதி
பிசகாதே வாதம்வரும் பிசகொன் றில்லை
தோணவே சாஸ்திரங்க ளெல்லாம் பார்த்தால்
தொல்லுலகில் சித்திதரும் தோற்ற மாமே.

நூல்பார்க்கச் சகலமுஞ் சித்தி.

24. ஆமேதான் முன்னேதான் நூல்கற் றோர்க்கு
அடைவாக ஞானவழி யடுத்துக் கூடும்
தாமேதான் வாதசித்தி யோகஞ் சித்தி
தப்பாமற் பண்டிதமுஞ் சித்தி யாகும்
வாமேதா னிதையறிந்து வல்லோ ரெல்லாம்
வகைஞானம் பேசுவார் மார்க்க மாக
நாமேதான் சொல்லிவிட்டோ மிந்நூல் தன்னில்
நலமாகச் சுயஞ்சோதி யாகும் பாரே.

அப்ரேகச் செம்பு.

25. ஆகுமே அப்பிரகச் செம்பு கேளு
ஆதியாங் கைபாக வரிசை யாகப்
பாகுபேர் வழலையினால் செம்பு மாகும்
பதிவாகச் செம்பைவிட்டால் செம்பே யில்லை
தாகுமே வடிவான தங்க மார்க்கந்
தாட்டிகமாய்ச் சொல்லுகிறே னுற்றுக் கேளு
வாகுமே யெல்லாமுஞ் சித்தி யாகும்
வடிவாக விந்நூலை மருவிப் பாரே.

26. பாரென்ற அப்பிரேகஞ் சேரு வொன்று
பதிவாக அரப்பொடியாய்ச் செய்து நீயுந்
தானென்ற தாளகமுஞ் சேரு வொன்று
தாட்டிகமாய்த் துருசதுவுஞ் சுட்ட நீறும்
வானென்ற கல்வத்தி விட்டுத் தானே
வடிவாக விருஜாமம் பாணி யாலே
நானென்று ஆட்டியே கதிரி விட்டு
நலமாகப் பாகமதை நவிலக் கேளே.

27. கவிலவே நல்லெண்ணெய் சேரு வொன்று
நலமான வெடியுப்புச் சுன்ன மொன்று
கவிலவே நல்லதண்ணீர் சேரு மொன்று
கனிவாகத் தண்ணீரை விட்டுச் சுன்னம்
பவிலவே கடைந்துநீ யிறுத்துத் தானே
பதிவாக நல்லெண்ணெய் தனிலே விட்டுத்
தவிலவே முறியுமட்டும் பால தாகத்
தாட்டிகமாய் முறித்துநீ பின்பு கேளே.

28. கேளுமே முன்னுரைத்த அப்ரே கத்தைக்
கெடியாக முறித்ததொரு பாவி விட்டு
வாளுமே கொதியிட்டுப் பொங்கா மற்றுன்
வடிவாக வெண்காரம் பொரித்துப் போட்டு
நாளுமே வொட்டயெரி குகையி விட்டு
நன்றாக வுருக்கிடவே மணியு மாகும்
பாலுமே வெள்ளிபொன்போற் கண்விட் டாடும்
பதிவாகக் கல்வத்தி லிட்டி டாயே.

29. இட்டுமே காரமது சேரு வொன்று
இதமாக விட்டுமே பழச்சாற் றுலே
நட்டுமே விட்டரைத்து உண்டை பண்ணி
நலமாகக் குகையிலிட் டுருக்கித் திரு
பட்டுமே வெள்ளிபொன்போல் கண்விட் டாடும்
பதிவாக அப்பிரகச் சத்து மாச்சு
வட்டுமே சத்தெடுத்துப் புறம்பாய் வைத்து
வடிவாகச் சிங்கியது பலமுங் கேளே.

**அப்ரகச் சத்துடனே மிருதார்சிங்கி சேர்ந்த சிந்தூரம்.**

0. கேளுமே மிருதார சிங்கி தானும்
கெடியாகப் பலமதுதான் சேரு மொன்று
வாளுமே சிங்கியெடை துருசு சேரு
வடிவாக விவையிரண்டுங் கல்வத் திட்டு

காளுமே யிருஜாம மறைந்து வில்லை
நலமாகக் கட்டியே கதிரி லிட்டுப்
பாளுமே போகாது புடமும் போடப்
பதிவாகப் புடமும்போட் டெடுத்துப் பாரே

31. எடுத்துமே சிங்கியது சிந்தூர மாகும்
இதமாக அப்பிரகச் சத்த தோடே
அடுத்துநீ சேர்த்துஅரை அமுரி யாலே
அடைவாக விருஜாமஞ் சென்ற பின்னர்க்
கடுத்துநீ வில்லைதட்டிக் காயப் போடு
கனிவாகப் பெரியபுடம் போட்டெ டுக்க
கடத்துநீ சிந்தூர முருக்கம் பூவாம்
நலமாக வேதையிலே ரொம்பக் கேளே.

## மேற்படி வேதை.

32. கேளுமே வெள்ளியது எட்டுத் தானுங்
கெடியாக ரண்டுமது சேர்த்துத் தானே
ஆளுமே யுருக்கிடவே தங்க மாகும்
அடைவாகத் தங்கமது பத்து மாற்று
ஏலுமே யுருகுகட்டி யிறங்கும் பாரு
இதமாக இதைவிற்று ஜீவ னத்தை
நாளுமே யுண்டுநீ ரேச கும்பம்
நலமான வாசியதைச் செய்தி டாயே.

33. செய்திடவே அப்பிரகச் செம்பைப் போல
செகத்திலே கிடையாது சித்தி யாகும்
நய்திடவே சத்தியுட நாத மாச்சு
நலமான பொருளாச்சு நல்சிந் தாதி
கைதிடவே வாதவெள்ளைக் கிணறு மாச்சுக்
கனிவாகச் சிந்தூரம் பண்ணிப் புண்ணைப்
பைதிடவே நரைதிரைக ளற்றுப் போச்சுப்
பதியான விதியாளி காணு வானே.

## வெள்ளிவித்தை - சூதபாஷாணக் களங்கு.

காணவே பூரணத்தில் வெள்ளி வித்தை
கனிவாகச் சொல்லிவிட்டேன் கனிந்து பாரு
ஊணவே சூத்திரத்திற் சுருக்க மாக
உறுதியாய்ச் சொல்லுகிறே னுற்றுக் கேளு
வாணவே சூதத்தின் பதங்கந் தானும்
வடிவாகப் பலம்பத்து நிறுத்துக் கல்வம்
மாணவே பாஷாணஞ் சேரு வொன்று
மடைவாகப் பொடித்துநீ கடத்திற் போடே.

போட்டுமே மேன்மூடி சீலை செய்து
பதிவாக வடுப்பேற்றி யெரித்துப் பாரு
நாட்டுமே வெள்ளையென்ற பாஷா ணத்தில்
நலமாக விருந்தெண்ணெய் தீயோ யேறும்
காட்டுமே பதங்கமது மிடையே சேர்த்துக்
கனிவாக வரைத்திடவே வேண்டும் பாரு
வாட்டுநீ யிதையரைக்கப் புகைநீர் கேளு
வடிவான சீனமது சேரு வொன்றே.

### சீனத் திராவகம்.

ஒன்றாக இட்டுநீ பொடித்துத் தானும்
உருவாக வாலையென்ற சட்டி மூடி
நன்றாக இருஜாம மெரித்திட் டக்கால்
நலமான புளிப்பான புகைநீ ராகும்
வன்றான இந்நீரி னாலே யாட்டி
வடிவாக வுண்டைபண்ணிக் காய வைத்துக்
கன்றாக வுப்பிலிட் டெரிக்க நீயும்
கனிவாக வோடாம லிருக்கும் பாரே.

## மேற்படியால் வெள்ளீய நீர்வாங்க அண்டோடு கிளிஞ்சல் சேர்ந்த சுன்னம்.

37. ஆச்சப்பா களங்காக விருக்கும் பாரு
அருள்பெருகும் பூரணத்தை நோக்கித் தா(
வாச்சப்பா வெள்ளீயம் நீரை வாங்க
வடிவாகச் சொல்லுகிறேன் வண்மை கேளு
பாச்சப்பா அண்டோடு சேரு பத்து
பதிவாகக் கிளிஞ்சிலென்ற ஓடு பத்து
நாச்சப்பா உவர்மண்ணுஞ் சுண்ணும்பு நேரே
நலமாகப் படியொன்று கரைத்தி டாயே.

38. கரைத்துமே பாணிவிட்டுத் திரிநாள் வைத்துக்
கனிவாகத் தெளிவிறுத்துப் பின்பு கேளு
நரைத்துமே அண்டோடு கிளிஞ்சி போட்டு
நலமாக வொட்டளரி கட்டிப் போகும்
முரைத்துநீ பாண்டத்தி லோட்டி. லெண்ணெய்
முனிவாகக் கழன்றுபோ மிதையெ டுத்துப்,
பரைத்துமே கழுவியே காயப் போட்டுப்
பதிவாக வுரலிலிட் டிடித்தி டாயே.

39. இடித்துநீ பொடியாக்கி யெட்டுக் கொன்று
இதமாகச் சீனத்தைப் பொடித்துப் போடு
நடித்துமே கலந்துநீ நினைவ தாக
நலமான சுட்டகுகை தனையெ டுத்து
வடித்துமே மாவதனைப் பாதி யிட்டு
வடிவாக வெள்ளீயங் குகையி லிட்டுப்
படித்துநீ அதன்மேலே மாவைக் கொட்டிப்
பதிவாக உலையில்வைத் தூதி டாயே.

ஊதிடவே வெள்ளீயம் நீர்க ளெல்லாம்
ஊதவே விஷநீர்க ளற்றுப் போகும்
காதிடவே வெள்ளிபோல் நிறமு மாகும்
கனிவாக வோசையது காணு நன்றாய்
வாதிடவே யிந்தவெள் ளீயந் தன்னில்
வடிவாக நூற்றினுக் கொன்று தானும்
மாதிடவே முன்சொன்ன களங்கந் தன்னை
மயமாகக் கொடுத்துருக்கி மாற்றுப் பாரே.

1. மாத்தாகும் வெள்ளிதான் பத்து மாற்று
மயமாக வங்கத்தைக் கொடுத்து ஊத
கூத்தாடி ஓடாது பத்து மாற்று
குணமாக விந்தவெள்ளி நல்ல தாகும்
வாத்தாடி யிதைவிற்று ஜீவ னத்தை
வடிவாகச் செய்திடவே வடிவு மெத்த
நாத்தாகக் கண்டுகொள்ளு நாடிப் பாரு
நல்லசித்தா மாகுமது நம்பிப் பாரே.

பாருநீ யிந்தவெள்ளி வித்தை தானும்
பதிவாக விற்றுநீ வாசி யோகந்
தாருநீ பார்த்திடவே சகல சித்தும்
தானாகும் வேதைகுரு தாண்டி யோடும்
பாருநீ சூத்திரத்தில் சுருக்கிச் சோன்னேன்
படிவாக விவையிரண்டு மொத்துப் பாரு
காருநீ வைத்திடவே சித்தி யாகும்
கருணையாய் ஞானத்தைக் கண்டி டாயே.

கண்டிடவே வேண்டுமென்றால் சொல்லக் கேளு
கனமாக வெள்ளீயம் நீரை வாங்கி
முண்டிடவே யிதைவிற்று ஜீவ னத்தை
முடிவாகப் பண்ணிவிட முத்தி முத்தி

பண்டுபழங் கதையைநீ பேச வேண்டாம்
பதிவாகக் கைபாகங் கண்டெடுத்துத்
தொண்டுநீ செய்தாலோ சகல சித்தும்
துடியாக வெல்லாமுஞ் சித்தி யாமே.

வெடியுப்புச் சுன்னம்.

44. சித்தியே யாகவென்றால் சொல்லக் கேளு
சிறப்பாக விந்நூலில் சொன்ன சொல்லை
முத்தியா யதைப்பிரித்துச் சூத்தி ரத்தில்
முனிவாகச் சொல்லுகிறேன் முனிந்து கேளு
நத்தியே வெடியுப்பு ஐந்தாங் காய்ச்சல்
நலமாகப் பலம்பத்து நிறுத்துக் கொண்டு
நத்தியே பழம்புளிதான் பலமோ ரைந்து
நலமாக விரண்டுமொன்றாய்ச் சேர்த்தி டமே

45. சேத்துநீ வுலக்கையா லிடித்து நையச்
செம்மையாய் மூன்றுநாள் கதிரி லிட்டுப்
பாத்துநீ புதுச்சட்டி யடுப்பி லிட்டுப்
பரிவாக எரியிட்டுப் பார்க்கத் தானும்
வாத்துமே யெரிந்துமே யுருகி நிற்கும்
வடிவாகக் கடுஞ்சுன்ன மாகக் காணும்
ஊத்துமே வழித்துநீ புறமே வைத்து
உறுதியா யிந்தெடைக்குப் பாதி தானே.

46. பாதியாய்ச் சுடர்க்கொடியோன் பாதி யிட்டுப்
பாகமா யெலுமிச்சம் பழச்சா றூட்டி
நாதியாய் வில்லைதட்டிக் காயப் போடு
நலமாகச் சுண்ணாம்புக் குள்ளே யிட்டுச்
சோதியாய்ப் பத்தெருவில் புடத்தைப் போடு
சுயமாகச் சுன்னமது கசிவு நீங்கிக்
கோதியா யிருக்குமது பின்பு கேளு
குணமாகக் கைபாக வரிசை கேளே.

17. வரிசையாய்ச் சுன்னத்தி னிடையே சீனம்
வடிவாகச் சேர்த்துஅரை பழச்சாற் றாலே
கரிசையா யிருஜாம மரைத்துத் தானே
கனிவாக வில்லைதட்டிக் கதிரி லிட்டுப்
பரிசையாய்க் கரியில்வைத் தூதிப் போடு
பதிவாக வெடியுப்புச் சுன்ன மாச்சு
நரிசையாய்ச் சுன்னத்தைப் பணியில் வைக்க
நலமாகப் பலபலென ஜயநீ ராச்சே.

வெடியுப்பு ஜயநீரால் தாளகச் சுன்னம்.

ஆச்சென்ற ஜயநீரை யிறுத்துக் கொண்டு
அடைவாக வதன்பின்னர்த் தாள கத்தை
நாச்சென்ற அங்கிதனைக் கட்டக் கேளு
நலமான வளையலுப் பொட்டி ரெட்டி
பாச்சென்ற பாணிவிட் டரைத்துக் கொண்டு
பதிவாகத் தாளகத்தின் மேலே கட்டி
காச்சென்ற கரியோட்டில் குழுற வாட்டிக்
குணமாகத் தண்ணீரில் போட்டி டாயே.

போட்டிடவே வுப்பெல்லாங் கரைந்து போகும்
புகழாகத் தாளகந்தான் சிவந்து நிற்கும்
காட்டிடவே யதையெடுத்துக் குறட்டி லேதான்
கனிவாகப் பிடித்துநீ ஜயநீர் தன்னில்
வாட்டிடவே துவைத்துநீ பாக மாக
வடிவாக வாட்டிப்பார் கட்டி தானும்
மூட்டிடவே சிவந்துநிற்கும் தாள கந்தான்
முனிவாகக் கவசமது மொழியக் கேளே.

கேளுமே வெடியுப்பு ஜயநீர் முன்னே
கெடியாகச் சுண்ணும்பைக் கல்வக் திட்டு
நாளுமே யொட்டிரெட்டி பழச்சாற் றாலே
நலமாக விருஜாம மரைத்துத் தானே

வாளுமே தாளகத்தின் மேலே கட்டு
வடிவாகக் கதிரிலிட்டுக் காய வைத்துப்
பாளுமே போகாது புடத்தைப் போடு
பதிவாகக் கட்டியைத்தா னுடைத்தி டாயே.

மேற்படி தாளகச்சுன்னத்தால் துருசுச் சுன்னம்.

51. உடைத்துப்பார் தந்தம்போல் சுன்ன மாகும்
கெடியான சுன்னத்தின் பெருமை தன்னை
விடைத்துநீ சிவனாலும் சொல்லப் போமோ
விதமாக வதையெடுத்துக் கல்வத் திட்டுப்
படைத்துநீ முன்ஜயநீர் தன்னா லாட்டிப்
பதிவாகத் துருசின்மேற் கவசங் கட்டு
நடைத்துநீ கதிரிலிட்டுக் காயப் போடு
நலமாகப் பத்தெருவிற் புடத்தைப் போடே.

மேற்படி துருசால் தாளகச் சுன்னம் - வேதை.

52. போடவே தீயாறி யெடுத்துப் பாரு
பொலிவாகத் துருசதுவுஞ் சுன்ன மாகும்
ஆடவே துருசதுவுஞ் சுன்ன மானால்
அண்டரண்டந் துளைத்தாடு மநேக வேதை
கூடவே தாளகத்தின் மேலே தானே
குணமாகக் கட்டியதைத் துவைந்து வாட்ட
நாடவே தாளகந்தான் சுன்ன மாகும்
நலமான நவலோகம் நூற்றுக் கொன்றே.

53. கண்டாலும் பேசார்கள் சித்தர் மார்க்கம்
கனிந்தகனி போலாகுந் தாள கந்தான்
பெண்ணாகும் பூவுலகின் போக்கு மெத்த
பேசினுமே தெரியாது சண்டி கட்கு
நன்றாகச் சொல்லிவிட்டேன் சூத்தி ரத்தில்
நானறிந்த படிபாரு நன்மை யாகு
முண்டாகச் சொல்லாதே முனிந்து பாரு
மூவுலகும் படைத்தசிவன் மொழிந்திட் டாரே.

தாளகத் தங்கத்தால் கணபதிசெய்து பூஜிக்க.

54. மொழியவே தாளகத்தின் தங்கத் தாலே
முனிந்துநீ கணபதியைப் பண்ணி நீயும்
பொழியவே வைத்துநீ எட்டெ ழுத்தைப்
பொருத்தமாய்ப் பூசிப்பாய் பூசை செய்து
தழியவே சிவபூசை பண்ணிக் கொண்டு
தாட்டிகமா யுண்டுடுத்திக் கவனம் பாரு
நழியவே கவனவழி யோட்டிப் பாரு
நாதாந்த மெய்ப்பொருளின் நாட்டம் பாரே.

தாளகச் சுன்னத்தால் தாம்பிரச்சுன்னம் - வேதை.

நாட்டமாந் தாளகத்தின் சுன்னந் தன்னை
நலமாகக் கல்வத்தி லிட்டுத் தானே
வாட்டமா யரைத்துநீ தாம்பி ரத்தில்
வடிவாகத் தட்டியே காய வைத்து
ஒட்டமாய்ப் பத்தெருவி லடுக்கிப் போடு
உற்றுமே தாம்பிரமுஞ் சுன்ன மாகும்
கூட்டமாய் ரசபதங்கஞ் சேர்த்து நீயும்
குணமாக எடைசமனாய்ச் சேர்த்தி டாயே.

சேர்த்துநீ யெடைசமனாய்ச் சேர்த்துக் கொண்டு
துடியான வெடியுப்பு ஜயநீ ராலே
பார்த்துநீ யரைத்துமே வில்லை தட்டிப்
பதிவாகப் பத்தெருவி லடுக்கிப் போடு
சாத்துமே யெடைபோகாச் சுன்ன மாகும்
சரியான வாதமிதி லடங்கிப் போகும்
காத்துமே நவலோகம் நூற்றுக் கொன்று
கனிவாக இட்டுருக்கு மாற்றுப் பத்தே.

பத்தான மாற்றுள்ள பொன்னை விற்றுப்
படியாக வுண்டுடுத்தி வழியைக் கேளு
நத்தான வழிதேடு நல்ல யோகம்
நலமாகப் பார்த்திடவே சித்தி சித்தி

வாளுமே தாளகத்தின் மேலே கட்டு
வடிவாகக் கதிரிலிட்டுக் காய வைத்துப்
பாளுமே போகாது புடத்தைப் போடு
பதிவாகக் கட்டியைத்தா னுடைத்தி டாயே.

மேற்படி தாளகச்சுன்னத்தால் துருசுச் சுன்னம்.

51. உடைத்துப்பார் தந்தம்போல் சுன்ன மாகும்
கெடியான சுன்னத்தின் பெருமை தன்னை
விடைத்துநீ சிவனாலும் சொல்லப் போமோ -
விதமாக வதையெடுத்துக் கல்வத் திட்டுப்
படைத்துநீ முன்ஜயநீர் தன்னா லாட்டிப்
பதிவாகத் துருசின்மேற் கவசங் கட்டு
நடைத்துநீ கதிரிலிட்டுக் காயப் போடு
நலமாகப் பத்தெருவிற் புடத்தைப் போடே.

மேற்படி துருசால் தாளகச் சுன்னம் - வேதை.

52. போடவே தீயாறி யெடுத்துப் பாரு
பொலிவாகத் துருசதுவுஞ் சுன்ன மாகும்
ஆடவே துருசதுவுஞ் சுன்ன மானால்
அண்டரண்டந் துளைத்தாடு மநேக வேதை
கூடவே தாளகத்தின் மேலே தானே
குணமாகக் கட்டியதைத் துவைத்து வாட்ட
நாடவே தாளகந்தான் சுன்ன மாகும்
நலமான நவலோகம் நூற்றுக் கொன்றே.

53. கண்டாலும் பேசார்கள் சித்தர் மார்க்கம்
கனிந்தகனி போலாகுந் தாள கந்தான்
பெண்ணாகும் பூவுலகின் போக்கு மெத்த
பேசினுமே தெரியாது சண்டி கட்கு
நன்றாகச் சொல்லிவிட்டேன் சூத்தி ரத்தில்
நானறிந்த படிபாரு நன்மை யாகு
முண்டாகச் சொல்லாதே முனிந்து பாரு
மூவுலகும் படைத்தசிவன் மொழிந்திட் டாரே.

தாளகத் தங்கத்தால் கணபதிசெய்து பூஜிக்க.

54. மொழியவே தாளகத்தின் தங்கத் தாலே
முனிந்துநீ கணபதியைப் பண்ணி நீயும்
பொழியவே வைத்துநீ எட்டெட்டு மூத்தைப்
பொருத்தமாய்ப் பூசிப்பாய் பூசை செய்து
தழியவே சிவபூசை பண்ணிக் கொண்டு
தாட்டிகமா யுண்டுடுத்திக் கவனம் பாரு
நழியவே கவனவழி யோட்டிப் பாரு
நாதாந்த மெய்ப்பொருளின் நாட்டம் பாரே.

தாளகச் சுன்னத்தால் தாம்பிரச்சுன்னம் - வேதை.

55. நாட்டமாந் தாளகத்தின் சுன்னந் தன்னை
நலமாகக் கல்வத்தி லிட்டுத் தானே
வாட்டமா யரைத்துநீ தாம்பி ரத்தில்
வடிவாகத் தட்டியே காய வைத்து
ஓட்டமாய்ப் பத்தெருவி லடுக்கிப் போடு
உற்றுமே தாம்பிரமுஞ் சுன்ன மாகும்
கூட்டமாய் ரசபதங்கஞ் சேர்த்து நீயும்
குணமாக எடைசமனாய்ச் சேர்த்தி டாயே.

56. சேர்த்துநீ யெடைசமனாய்ச் சேர்த்துக் கொண்டு
துடியான வெடியுப்பு ஜயநீ ராலே
பார்த்துநீ யரைத்துமே வில்லை தட்டிப்
பதிவாகப் பத்தெருவி லடுக்கிப் போடு
சாத்துமே யெடைபோகாச் சுன்ன மாகும்
சரியான வாதமிதி லடங்கிப் போகும்
காத்துமே நவலோகம் நூற்றுக் கொன்று
கனிவாக இட்டுருக்கு மாற்றுப் பத்தே.

57. பத்தான மாற்றுள்ள பொன்னை விற்றுப்
படியாக வுண்டுடுத்தி வழியைக் கேளு
நத்தான வழிதேடு நல்ல யோகம்
நலமாகப் பார்த்திடவே சித்தி சித்தி

முத்தான யோகமது பண்ண வேண்டாம்
முனிவான சிவயோக மொழிந்து கூடு
வித்தான விவேகத்தைக் கண்டு தேறு
விதமாக வெல்லாமும் மொழிந்து பாரே.

தாளகச் சுன்னத்தால் தங்கச்சுன்னம் - வேதை.

58. மொழியவே தாளகத்தின் சுன்னந் தன்னை
மோகமாய்க் கல்வத்தி விட்டுக் கேளு
நழியவே வெடியுப்பு ஜயநீ ராலே
நலமாகக் கடிகையே யதுதா ழுழி
பிழியவே யரைத்துத் தங்கத்தின் மேலே
பெலமாகக் கட்டியே காய வைத்துச்
சுழியவே பத்தெருவில் புடத்தைப் போடு
சரியாகத் தீயாற்றி யெடுத்தி டாயே.

59. எடுத்துநீ பார்த்தவுடன் தங்கச் சுன்னம்
இதமாக விருந்துவிடும் தங்க நீற்றை
அடுத்துமே நவலோகம் நூற்றுக் கொன்று
அடைவாக இட்டுருக்கப் பத்து மாற்று
நடுத்துமே தாம்பிரத்தின் ஜல்லி நூறு
நலமாகச் சட்டிதனி விட்டுத் தானே
கடுத்துமே வறுத்துநீ தங்கச் சுன்னம்
கனிவாகப் பணவெடைதான் போட்டி டாயே.

60. போட்டுவறு தாம்பிரமும் பத்து மாற்று
புகலரிய வுப்புக்குங் காவிக் கப்பா
நாட்டுமே யோடாது நல்ல வித்தை
நாதாந்த சாரமது நாட்டுள் ளோர்க்கு
வீட்டுமே திரியாதே தங்க நீற்றை
விதமாகப் பணவீத முண்டு தேரு
தேட்டுமே யிதுரொம்பத் தேட்ட மாகுஞ்
சிவயோக வழிதானே செல்வ மாமே.

## மேற்படி தங்கச்சுன்ன பலன்.

61. ஆமேதா னந்திசந்தி பணமவ் வீதம்
அடைவாக வுண்டுவர நோய்தான் போகும்
நாமேதான் நரைதிரைக ளற்றுப் போகும்
நாதாந்தப் பேரொளியி னடத்தை காணும்
நாமேதான் சாவில்லை நோய்கள் தீரும்
தாட்டிகமாய்க் கவனவழி தீர்க்க மாகும்
காமேதான் கனகமிது பாரு பாரு
காதலுட னெல்லாமுங் கண்டு பாரே.

62. கண்டுபார் தாளகத்தின் சுன்னந் தன்னைக்
கனிவாகக் கல்வத்தி லிட்டுத் தானே
முண்டுபார் வெடியுப்பு ஜயநீ ராலே
முனிவாக விட்டுநீ முடிய ஆட்டி
கண்டுபா ரயத்தகடு மேலே கட்டு
கனிவாகப் பத்தெருவிற் புடத்தைப் போடு
தொண்டுபா ரயமதுவும் நீறிப் போகும்
துடியாக வெடுத்துநீ தொன்மை கேளே.

63. கேளுமே நவலோகம் நூற்றுக் கொன்று
கெடியாக யிட்டுருக்கு மாற்று எட்டு
வாளுமே வுப்புக்குங் காவிக் கப்பா
வடிவாக வோடாது வொழிந்தி டாது
நாளுமே யந்திசந்தி பணமவ் வீதம்
நலமாக வுண்டுவரத் தீரும் நோய்கள்
தாளுமே விந்திறுகு மண்ட வாதந்
தப்பாம லோடுமது நடத்தை தானே.

64. தானென்ற நரைதிரைக ளற்றுப் போகும்
தாட்டிகமாய்ப் பசுநரம்பு தானே மின்னும்
நானேதான் சொல்லிவிட்டேன் சூத்தி ரத்தில்
நலமாக வாதசித்தி க்ஷணத்தி லாகும்

வானேது விண்ணேது நிறைந்த தங்கம்
வடிவாக வெல்லாமுங் கைக்கு ளாகும்
ஊனேது வுடலிறுகு மயத்தின் போக்கு
உற்றுநீ பார்த்திடவே வுண்மை யாமே.

வாதி முறைமை.

65. உண்மையாய் வழலைதொட்டு வாதம் பாரு
உற்றுநீ அயத்தினுட போக்கு மெத்த
கண்டபேர் தமக்குமே சொல்ல வேண்டாம்
கனிவாக வழலையென்ற பேரைத் தானும்
முண்டைநாய் ஞானிகள்போல் பிதற்று வார்கள்
முக்கியமாய் மருந்துகளைப் பார்த்தோ மென்பார்
சண்டாள ரிவர்முகத்தைப் பார்க்கா தேயார்
தனித்துமே வாதிக்கு முறையி தாமே.

66. ஆமேதா னூலில்லா வாதி மார்கள்
அடைவாகப் புலம்பிய நூல் பார்த்தோ மென்று
நாமேதான் நூல்வளமை தெரியா தாலே
நலமாகச் சாஸ்திரத்தைப் பொய்யென் பார்கள்
வாமேதான் யூகிமுனி நூலெல் லாம்பார்
வடிவாகச் சாஸ்திரத்தை மருவிப் பாரு
தாமேதான் பண்டிதத்தின் சித்தி பாரு
கருவான பூரணத்தின் நிலையைப் பாரே.

யூகிமுனி சாஸ்திரக்கோவையைப் பார்த்தபின்
சகலமுஞ் சித்தியாமெனல்.

67. பாருமே வாதகாண் டத்தைப் பாரு
பதிவான கும்மியெல்லாம் பழக்கம் பாரு
நாருமே முன்காண்டம் பின்காண் டம்பார்
நலமான வாதவுலா தன்னைப் பாரு

காருமே பள்ளேல்லாம் பிரித்துப் பாரு
கருக்கிடையும் குறுக்கிடையும் கருவாய்த் தோன்
ஏருமே வுழுததுபோல் நூல்க ளாகும் | றும்
இதமான நூலெல்லாம் பாரு பாரே.

68. பார்த்திடவே நூல்களெல்லாம் சித்தி தோன்றும்
பதிவாகச் சத்துருவு மித்துருவுந் தோன்றும்
காத்திடவே நூல்களிட் மர்மந் தோன்றும்
கனிவாகச் சித்திதருங் கண்டு பாரு
நாத்திடவே யெல்லாமுஞ் சித்தி யாகும்
நாடினு லெந்நூலை நயந்து பாரு
வாத்திடவே சகல சித்தி யுடனே யாகும்
வடிவான சாஸ்திரத்தை யடுத்துப் பாரே.

69. பாருமே உலகத்தில் வாதம் பொய்யோ
பரிவான வழலைபொய்யோ பரிந்து கேளு
நாருமே சரக்குகள்தாம் பொய்யே யென்பார்
நலமான யோகமென்ன பொய்யே யென்பார்
தாருமே கைபாகம் தெரியா தாலே
தண்மையாய்ச் சாஸ்திரங்கள் பொய்யென் பார்
ஏருமே விழுதாலே யிதக்கப் பட்டு | கள்
இதமாகச் சேருகு மின்ப மாமே.

70. ஆமேதான் சரக்குகளை வைத்து வைத்து
அடைவாகக் கைபாக மறியா தாலே
வாமேதான் மயங்கியே யலைந்து லைந்து
வடிவாக நல்லவழி காணு தாலே
போமேதான் புலம்பியே மாய்ந்து மாய்ந்து
பொல்லாத துரோகியாய் வைவா ரப்பா
தாமேதான் தபித்துமே யேங்கி நொந்து
தாட்டிகமாய் வைவார்கள் வாதி யோரே.

வாதிகள் ரசங்கட்டில் சகலமுங் சித்தியாமெனல்.

71. வாதிதனக் காகவே யின்ன மொன்று
வடிவாகச் சொல்லுகிறேன் வண்மை கேளு
நீதியா யிரதமது நெருப்பில் நின்றால்
நிலைக்குமே காயமது காயந் தானும்
நாதியாய் நிலைக்குமது காயந் தானும்
நலமாக நரைதிரைக ளற்றுப் போகும்
பாதிகொள் சடைமுடியர் போலே யாகும்
பதிவாகப் பார்த்திடவே பலனு மாமே.

72. ஆமேதா னெல்லாமும் பார்த்துத் தேறி
யாடலாம் கோடிவித்தை யண்டந் தன்னில்
வாமேதா னுடலாங் கோடா கோடி
வடிவாக வித்தையிதில் வடிவு காணும்
நாடுமே சுருக்கத்தி லெல்லாஞ் சொன்னேன்
நலமாக யூகிமுனி நூலைப் பாரு
தாமேதா னெல்லாமும் நூலி லாகும்
தாட்டிகமாய்ப் பார்த்துணர வெல்லாஞ் சித்தே.

வேறு வழலை.

73. சித்தாக வின்னமொரு வழலை மார்க்கம்
செப்புகிறே னுலகத்தில் தேர்ந்து பாரு
முத்தான வழலையது சுட்ட சாம்பல்
முனிவாகப் படிநாலு அளந்து விட்டு
நத்தாகப் பாணியது பெய்ட்டு விட்டு
நலமாகப் பாணிதனில் கரைத்து நீயும்
வித்தாக நல்லெண்ணெய்ப் படியி லேதான்
விதமாக விட்டுநீ வைத்தி டாயே.

ஷை வழலையில் அயவகைச்சத்து.

74. வைத்திடுவாய் பாலாக முறியு மட்டும்
வடிவாக முறிந்தபின்பு மார்க்கங் கேளு
நைத்திடுவாய் கௌரியென்ற பாஷா ணந்தான்
நலமாகப் பலம்பத்து கரைத்து விட்டு

கைத்துமே கொதிக்கவைத்துப் பின்பு கேளு
கனிவாக அரப்பொடியும் பலமும் பத்து
நைத்துநீ வழலையிலே கொதிக்க வைத்து
நலமாக வொட்டவே காய்ச்சி டாயே.

75. காச்சிட்டுப் பின்புநான் குகையி லிட்டுக்
கனிவாக வுருக்கிடவே யுருகி யாடும்
வாச்சிட்டு வெள்ளிபொன்போல் கண்விட் டாடும்
வடிவாகச் செம்புதா னுடையே சேர்த்துப்
பாச்சிட்டு உருக்கிடவே யுருகி யாடும்
பரிவாகக் கல்வத்தி லுடைத்துப் பின்பு
நாச்சிட்டுக் கெந்தியது முக்கா லிட்டு
நலமாகப் பொடித்துநீ பின்பு கேளே.

76. கேளுமே வழலையென்ற தைலந் தன்னில்
கெடியாகப் பொடித்துநீ போட்டுக் காய்ச்சி
நாளுமே ஓட்டவெரி குகையி லிட்டு
நலமாக வுருக்கிடவே சத்து மாகும்
வாளுமே வெண்காரம் பாதி சேர்த்து
வடிவாகக் கல்வத்தி லிட்ட ரைத்துப்
பாளுமே வில்லைதட்டிக் காயப் போட்டுப்
பதிவாகப் புடம்போட்டு எடுத்தி டாயே.

### ஷை அயவகைச் சத்தில் மிருதார்சிங்கி சேர்ந்த சித்தூரம்-வேதை

77. எடுத்துமே குகையிலிட் டுருக்கித் தீரு
இதமாக வெள்ளிபொன்போல் கண்விட்டாடு
மடுத்துநீ புறம்பாக வைத்துக் கொண்டு
அடைவாக மிருதார சிங்கி தானு
மடுத்துமே பலம்பத்து நறுக்கிக் கொண்டு
மயமாக அவ்வெடைக்குத் துருசு கூட்டி

நடுத்துமே அமுரிவிட் டரைத்து நீயும்
நலமாக வில்லைதட்டிக் காயப் போடே.

78. போடவே பத்தெருவில் புடத்தைப் போடு
பொலிவாக வெடுத்துநீ சொல்லக் கேளு
ஆடவே முன்னுருக்கு மயத்தி லேதா
னடைவாக எடைசமமாய்ச் சேர்த்துக் கொண்டு
கூடவே யமுரியா லரைத்து வில்லை
குணமாகச் செய்துநீ காயப் போடு
வாடவே பெரியபுடம் போட்டெ டுக்க
வடிவாகச் சிந்தூர மாகுந் தானே.

79. ஆகுமே சிந்தூர முருக்கம் பூப்போல்
அடைவாகத் தானிருக்குங் குகையி லிட்டு
வாகுமே காரத்தைக் கூட்டு ருக்கு
வடிவாகச் செம்பாகும் மார்க்க மெத்த
பாருமே செம்பொன்னு யிருக்கும் பாரு
பதிவாக இச்செம்பில் வேதை கோடி
தாருமே வெள்ளிதனில் நூற்றுக் கொன்று
தாக்கிடவே மாத்தாகுந் தன்மை பாரே.

80. பாருமே வழலையினு லெல்லா மாச்சு
பாதிவான கைபாகத் தாலே யாச்சு
நீருமே வழலையென்ற எண்ணெய் விட்டால்
நிதமாக வொன்றுமில்லை யின்ப மாக
தாருமே தவிக்காதே காரம் பாரு
தாட்டிகமாய் வாதசித்தி சுகணத்தி லாச்சு
பாருமே வாதவெள்ளக் கேணி யாச்சு
வளமான நூல்றிய வெளிதி லாமே.

## அப்பிரகச் சிந்தூரம்.

81. ஆமேதான் தனுக்கில்லா அப்பிர கந்தா
ஞதியா யின்னமொன்று சொல்லக் கேளு
நாமேதா னப்பிரகம் பலமும் பத்து
நலமாக நவநீதம் பண்ணக் கேளு
வாமேதான் க்ஷீரமது பாதி யிட்டு
வளமாக இருஜாம மரைத்துப் பின்பு
சாமேதான் வெண்ணெய்போ லாகும் பாரு
சரியாகக் கலபத்தி லிட்டி டாயே.

82. இட்டுநீ மேல்மூடி சீலை செய்து
இதமாகச் சூட்டடுப்பி லெரித்து நன்றாய்க்
கட்டுநீ பார்த்திடவே உயர வேறுங்
கனிவாகப் பதங்கமெல்லாஞ் சுரண்டி வாங்கி
நட்டுமே தூரவைத் தடியில் நின்ற
நலமான அப்பிரகந் தனையெ டுத்து
மட்டுமே கல்வத்தி லிட்டு நன்றாய்
மதியாக வெடியுப்பு மெடையே சேரே.

83. சேர்த்துநீ யிருஜாமம் வாழைப் பாலால்
சிறப்பாக வரைத்துநீ வில்லை தட்டிப்
பார்த்துநீ பெரியபுடம் போட்டெ டுத்துப்
பதிவாகத் திரும்பவுமே வெடியுப் புத்தான்
காத்துநீ வெடியுப்புச் சமனாய்ச் சேர்த்துக்
கனிவாக முன்பாலா லரைத்துக் கொண்டு
வாத்துநீ வில்லைதட்டிக் காயப் போடு
வடிவாகப் பெரியபுடம் போட்டி டாயே.

84. போட்டுநீ கல்வத்தி லிட்டுத் தானே
பொலிவாகப் பாணியது படிரண் டுக்குள்
பாட்டுமே விட்டுநீ யரைக்கத் தானும்
பதிவாக அப்பிரகம் தனுக்கு அற்று

காட்டுநீ அப்பிரகம் தன்னைப் பாரு
கனிவாக யிருக்குமது கண்டு பாரு
மூட்டிநீ தெளிவைத்தா னிறுத்துப் போட்டு
முனிவாக அப்பிரக மெடுத்துக் கொள்ளே.

85. எடுத்துநீ வாழையென்ற பாலி னாலே
இதமாக வரைத்துநீ வில்லை தட்டி
அடுத்துமே பெரியபுடம் போட்டெ டுத்து
அடைவாக வெடுத்திட்டு ஆண்மை கேளு
நடுத்துமே ஆலமரம் பழம்போ லாகும்
நலமாக வெடுத்துநீ தூர வைத்து
படுத்துநீ யின்னமொன்று சொல்லக் கேளு
பதிவாக வெடியுப்புப் பலமும் பத்தே.

வேடியுப்புத் திராவம் செய்து ரசம் பூர்க்க வைத்து, ஷை அப்பிரகம் சேர்த்துச் சிந்தூரம் செய்தல்.

86. பத்தாக நிறுத்துநீ சீனந் தானும்
பதிவாகப் பலமிருபத் தைந்து மாகும்
கொத்தாக இவையிரண்டும் பொடித்து வாலே
கனிவாக இட்டுநீ வாலே மூடி
நத்தாகத் தீயெரிக்க முன்னீர் வீழும்
நலமாக வந்தநீர் தன்னைத் தள்ளு
வித்தாகப் பின்னீரை வாங்கி மைந்தா
விதமாக வைத்துநீ விரும்பி டாயே.

87. விரும்பியே சூதமது சேரே யொன்று
விதமாகப் பீங்கானி விட்டுக் கேளு
அரும்பியே புகைநீரைச் சூதத் திட்டு
அடைவாகக் கதிர்தனிலே வைத்துப் போடு
நரும்பியே வெண்ணெய்போ லாகும் பாரு
நலமாக வெண்ணெயெல்லா மெடுத்துக் கொண்டு
திரும்பியே புகைநீரைக் கொஞ்சங் குத்து
துடியாகச் சூதமெல்லாம் பூத்து வாங்கே.

88. வாங்கியே யெடுத்துநீ சேரே யொன்று
வடிவாக முன்செய்த அப்பிர கந்தான்
தாங்கியே சேரொன்று நிறுத்துக் கல்வம்
தாட்டிகமா இட்டுநீ புகைநீர் குத்திப்
பாங்கியே யரைத்துநீ யுமிநெ ருப்பில்
பதிவாக வறுத்துநீ பாகங் கேளு
தாங்கியே கடத்திலிட்டு மேலே மூடித்
தன்மையா யடுப்புதனி லேத்தி டாயே.

89. ஏத்தியே கமலம்போல் தீயை மூட்டு
இதமாக விருஜாம மெரித்துத் தீரு
நாத்தியே தீயாற்றி யெடுத்து நன்றாய்
நலமாகப் பீங்கானி லிட்டுக் கேளு
வாத்தியே புகைநீரை யதிலே யூற்றி
வடிவாக உமிநெருப்பில் வறுத்துப் போடு
சாத்தியே முருக்கம்பூப் போலே யாகும்
சரியாக முன்பு போ லெரித்தி டாயே.

90. எரித்திட்டு எடுத்துப்பார் முருக்கம் பூவாம்
இதமாக வைரவர்க்குப் பூசை பண்ணி
நரித்திட்டுச் செம்புதான் பத்து ருக்கு
நலமாக வொன்றுகொடு தூக்கி நீயும்
வடித்துநீ பார்த்திடவே தங்கம் போலாம்
வடிவாகச் செம்பொன்னு யிருக்கு மப்பா
உருக்கிநீ வெள்ளிதனை யூதி நீயு
முறுதியாய் நாலாறு சேர்த்துக் கொள்ளே.

91. சேர்த்துநீ யுருக்கியே மாற்றைப் பாரு
செழுஞ்சுட்டாங் திருமேனி சிவனைப் போலாம்
பார்த்துநீ எடுத்துப்பார் தங்க மாகு
பதிவாக உப்புக்கும் காவிக் கப்பா

நாத்துமே யிறங்கிவிடும் இதனை விற்று
நலமான வழியைநீ யடுத்துக் கூடு
மாத்துமே அப்பிரகந் தனில்பி றந்த
மதயானை சத்தியுட நாதந் தானே,

92. சத்தியுட நாதமது அப்ரே கந்தான்
சரியான செம்பதுவுங் கட்டிப் போகும்
புத்தியாய் அப்ரேகச் சிந்தூ ரத்தைப்
புக்கிநீ வைத்துரசந் தன்னைக் கட்டி
நத்தியே வாதத்தைப் பார்த்துத் தேறு
நலமாகச் சொல்லிவிட்டேன் சிவனுக் கொப்பாய்
முத்தியா யிந்தநூல் தன்னைக் கண்டால்
முக்கியமாய் வாதமது ஏவல் தானே.

93. தானென்ற அப்ரேக சிந்தூ ரத்தைத்
தண்மையா யமிர்தசர்க் கரையில் தானே
வானென்று வுண்டிடவே காய சித்தி
வடிவாக மேகநீ ரெல்லாம் போகும்
கானென்ற பித்தமுதல் வாத மெல்லாம்
கடல்புக்கும் க்ஷயரோக மனைத்தும் போகும்
நானென்ற மகோதரமும் போகும் பாரு
நலமாக வெல்லாமுஞ் சித்தி யாமே.

அரிதாரச் சுன்னம்.

94. ஆமேதான் வெகுசுருக் கரிதாரச் சுன்னம்
அடைவாகச் சொல்லுகிறோம் அறிவுள் ளோர்க்கு
வாமேதான் வெடியுப்புப் பலமும் பத்து
வடிவாகப் பழம்புளியும் பலமு மைந்து
நாமேதா னிரண்டுமொன்று யிடித்து நைய
நயமாக வில்லைதட்டி யடுப்பி விட்டு
வாமேதா னெரித்திடவே தீபி டித்து
வடிவாக வெரித்துப்பார் சுன்ன மாமே.

95. ஆமேதான் சுன்னத்தைக் கல்வத் திட்டு
அடைவாக வரைத்துநீ பனியில் வைக்க
சாமேதான் பலபலெனஜ யநீ ராகும்
சரியாக நீரெல்லா மிறுத்துக் கொண்டு
பாமேதான் தாளகமும் பலமும் பத்து
பதிவாக வளையலுப்பைக் கவசங் கட்டி
நாமேதான் கரியோட்டில் குழுற வாட்டி
நாடியே தண்ணீரிற் போட் டிடாயே

96. போட்டுமே பார்த்திடவே வளைய லுப்புப்
பொருமியே கரைந்துவிடும் தாள கத்தை
நாட்டுநீ பார்த்திடவே சிந்தூ ரம்போல்
நலமாக விருக்குமது கல்வத் திட்டுக்
கூட்டுநீ வெடியுப்பு ஜயநீ ராலே
குழுறஅரை ஜாமமது நான்கு மாகும்
வாட்டுநீ வில்லைதட்டிக் காயப் போடு
வடிவாகக் கற்சுன்னம் சட்டியிட்டே.

97. இட்டுநீ வில்லைதனை யுள்ளே யிட்டு
இதமாக இருஜாமந் தீயெ ரித்து
முட்டுநீ பிரித்தெடுத்துக் கல்வத் திட்டு
முனிவாக வெடியுப்பு ஜயநீ ராலே
கட்டுநீ வில்லைதனை யரைத்துக் கட்டிக்
கனிவாகச் சுண்ணும்புக் குள்ளே யிட்டுப்
பட்டுநீ புடம்போடு வில்லை தானும்
பதிவாகக் கருப்பாக விருக்கும் பாரே.

98. இருக்குமே வில்லைதனைக் கல்வத் திட்டு
இதமாக வெடியுப்பு ஜயநீ ராலே
பெருக்கவே யிருஜாம மரைத்து வில்லை
பிசகாதே பிடித்துநீ காய வைத்து
நெருக்கவே அகல்தனிலே சுன்ன மிட்டு
நேர்படவே வைத்துநீ புடத்தைப் போடு

பெருக்கவே தாளகந்தான் சுன்ன மாகும்
பேரான சுன்னத்தின் பெருமை கேளே.

99. கேளுமே துருசதுவும் நீறிப் போகும்
கெடியான சரக்கெல்லாம் சுன்ன மாகும்
பாருமே போகாது தொந்த மேறும்
பதிவான சரக்கனைத்துங் கட்டும் கட்டும்
வாளுமே யெல்லாமுங் கண்டு தேரு
வடிவாக வெல்லாமுஞ் சித்தி மெத்த
தாளுமே தூக்கவே யெல்லா நூலும்
தாட்டிகமாய்ப் பார்த்துநீ தண்மை காணே.

100. காணவே நோயெல்லாந் தீர்ந்து போகும்
கனிவாகத் தாளகத்தின் சுன்னத் தாலே
வாணவே வகைவிவர மாக வைத்து
வடிவாக யோகசித்தி வாத சித்தி
காணவே நாநூறு மறுநூ றும்பார்
நலமாகச் சூத்திரத்தை நவின்று பார்த்துத்
தோணவே கையாக மாகச் செய்தால்
தொல்லுலகில் ரசவாதம் சித்தி தானே.

யூகிமுனி பூரணம்—100
முற்றுப் பெற்றது.

---

சென்னைக் கடுத்துள்ள அமிஞ்சிக்கரை - சித்தவைத்தியர் ஸ்ரீமத் G. சாம்பசிவம்பிள்ளை அவர்கள் கொடுத்த சுத்தமான நூற்பிரதி ஒன்றுடன் சித்த ஆயுள்வேத வைத்தியர்-செங்கல்பட்டு சாமிபார் C. இராஜரத்தின முதலியாரவர்களிடத்திலிருந்த வேறிரண்டு நூற்பிரதிகளையும் ஒப்பிட்டுப்பார்த்து இந்நூல் அச்சியற்றப்பட்டது.

இந்நூற்பிரதி வேறு யாரிடத்திலேனுமிருக்குமாயின் அவர்கள் பாடபேதங்களையோ - இந்நூலிலுள்ள தவறுகளையோ தயைசெய்து தெரிவிப்பார்களாயின், அடுத்த பதிப்பில் அவை பிரசுரிக்கப்படும்.

ம. ஷண்முக முதலியார்.

# யூகிமுனி பூரணம்—100

## விஷய அட்டவணை.

| விஷயம் | பக்கம் |
| --- | --- |

---

# அறிக்கை.

சென்னை, கோமளேசுவரன்கோயில், சந்திரபானுவீதி 17 நெ. கட்டடத்தில் "சித்த ஆயுள்வேத வைத்தியசாலை" ஒன்று ஸ்தாபிக்கப்படுகின்றது. அதில், சித்த ஆயுள்வேத வைத்தியர் **செங்கல்பட்டு சாமியார் C. இராஜரத்தின முதலியாரும்** - டாக்டர் **M.** அறிவாநந்த முதலியாரும் (A. M. A. C.) சர்வ ரோகங்களுக்கும் தக்க மருந்து சாஸ்திரமுறையாய்ச் செய்து கொடுப்பார்கள். நோயாளிகள் நேரிலோ - கடித மூலமாகவோ தமது வியாதியின் கூறுபாடுகளைத் தெரிவித்து, தக்க மருந்து பெற்றுக்கொள்ளலாம்.

மருந்துகளின் விலை விபரப்படி இந்நூலின் கடைசிப்பக்கத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றது.

**மங்கலம்-ஷண்முக முதலியார்,**
சொந்தக்காரர்.

உ

பூகிமுனிவர் அருளிய

# கரிசல் - 151.

இது

சித்த ஆயுள்வேத வைத்தியர்

செங்கல்பட்டு சுவாமியார்

C. இராஜரத்தின முதலியார்

அவர்களால்

பரிசோதிக்கப்பெற்றது.

மங்கலம் - ஷண்முக முதலியாரால்

பதிப்பிக்கப்பெற்றது.

சென்னை, கோமளேசுவரன் பேட்டை,

அம்பாவிலாச புத்தகசாலை.

1928

உ

யூகிமுனிவர் அருளிச்செய்த

# கரிசல் - 151.

காப்பு.

திருவி லுயர்ந்தோர் தேடியுங் காணு
அருவுரு வான ஆதியே காப்பு. 1

திருவள ருலகில்
கருவினி லுதித்தோர்
வருவினை யகற்றும்
கரிமுகன் துணையே. 2

ஆதி யந்த நடுவில் நிறைந்த
சோதியே யென்றன் தொடர்பவ மகற்ற
நீதியா யொற்றைக் கொம்புடன் வந்த
கோதிலா வைங்கரன் குணகழல் காப்பே. 3

காப்பெனவே யென்குருவா மகத்தீசர் பாதம்
கருணையுள்ள மஹேஸ்வரத்தின் பாதம் போற்றித்
தாப்பான வாலைநிர் வாணி பாதம்
தவம்பெற்ற புஜண்டர்முதல் பெரியோர் பாதம்
கோப்பான சப்தரிஷி பாதம் போற்றிக்
கூறுவேன் தாயெனக்குக் குணமாய்ச் சொன்ன
வாப்பான உலகிலுள்ள மானி டர்க்கு
வரும்வினைகள் தீருதற்கு வசனித் தாளே. 4

வசனித்த நூல்தனக்குப் பேர்தான் கேட்டேன்
வாமிசிவ காமிதிரி சூலி நீலி
நிசமாக நாதனுரை செய்த வண்ணம்
நீமகனே கேளென்று நிமலி சொல்வாள்

கசடற்ற கரிசலென்று நாமந் தந்து
கடவுளர்தா மெனக்குரைத்தார் கருணை கூர்ந்து
பிசகில்லா துனக்குரைத்தேன் பூகி யப்பா
பேருலகில் பெரும்பிரம நிலையி னில்லே. 5

நிலையினில் லென்று நிமலி யுரைக்கவும்
கலைதெரிந் தென்குரு கருணையின் மிகுதியால்
அலைவிலா வெண்பா அருங்கலி விருத்தமும்
மலைவிலாச் சரிகவி வசனித்தேன் கரிசலே. 6

கரிசலிலே லேகியங்கள் சிந்தூ ரங்கள்
கனமான சுன்னமுடன் களங்கு பற்பம்
நெரிசலிலா மாத்திரைக டைல மெண்ணெய்
நேரிழைமார் கர்ப்பக்கோ ளகன்றே யோடப்
பரிசனமாந் தம்பனத்தின் குளிகை யோடும்
பாங்கான ஆண்பெண்ணுக் கிடும ருந்தும்
வரிசையுடன் வியாதிகட்குத் தகுதியாக |னேன்.
மானிலத்தில் பண்டிதர்தாம் பிழைக்கச் சொன்

பிழைக்க வென்று சொன்னதுவு முலகத் தோரைப்
பேரின்ப வாழ்வில்மனம் பெலக்க வென்று
தழைக்கவே சிவஞானவை ராக்ய மோங்கிச்
சதாநித்யம் பெரியோர்கள் தாள்ப ணிந்து
புழைக்கையோன் அருள்பெற்றுத் தலமுந் தாண்டிப்
புவனைபரா சத்தியுட னருளும் பெற்றுத்
தழைத்திடவே பண்டிதம்செய் தவனி யெங்கும்
தான்பெருகப் பேர்வாங்கிப் பிழைத்தி டாயே.

பிழைத்திடவே சொன்னநிலை தன்னை விட்டுப்
பேதையர்மேல் மையல்கொண்டு பினத்தி டாதே
அழைத்திடவே வைத்தியனென் றுலகி லுன்னை
அவனியுள்ளோர் கொண்டாடிப் பேர்தான் பெற்றுத்

தழைத்திடவே உலகிலுள்ள மனிதர்க் கெல்லாம்
தான்வந்த வியாதிகளைத் தலைகெட் டோடச்
செழித்திடவே ஜெயகம்பம் நாட்டி வெற்றி
செய்துகொடி கட்டிப்பண் டிதம்செய் வாயே. 9

வாய்ச்சாலம் பேசுவதி லொன்று மில்லை
வாதிமக னாலே வைத்யஞ் செய்வான்
பேய்போலே யலையாதே மௌன மாகிப்
பெரியோரைப் பணிந்துமவ ரருளைப் பெற்றுத்
தாயான மனோன்மணியைப் பணிந்து போற்றித்
தந்தையாஞ் சதாசிவத்தி னருளும் பெற்று
ஓயாமல் வாசிமனக் குதிரை யேறி
உலகமென்ற அண்டமெல்லாம் சுற்றிப் பாரே. 10

பாரென்று சொல்லிவிட்டே னறிவுள் ளோனே
பார்ப்பதுதன் மனமடங்கப் பார்க்க வேண்டும்
காரென்ற மேகம்போற் கருணை கூர்ந்து
கடாட்சித்த குருவருட்குப் பாத்ர னாவாய்
தேருதற்கு வழிகாட்டும் வேதந் தன்னைத்
திடம்பெறவே மனதுறுதி யாகக் கொண்டு
சார்பென்ற அதிரசத்தை யுண்டு தேறிச்
சாயுஜ்ய பதம்பெறவே சாரத்தைப் பாரே. 11

சரமென்றால் ரவிமதியாஞ் சுழினை மூன்றும்
தானறிந்து சோடசத்தை ரவியில் சேர்த்துப்
பரபரப்பாய்த் துரிதமுடன் பழக்கஞ் செய்து
பாழ்போகா வண்ணம்ரோ கணியை யுண்டால்
நேராக மூன்றுமுந்தன் வசமே யாகும்
நிலைத்ததடா முப்பூவின் மறைப்பெல் லாந்தான்
காரான முப்பூவும் வழலைப் போக்கும்
கருமான முள்ளவெல்லாம் கைமேற் காணே. 12

காணலாம் வாசிவச மானால் மைந்தா
கனமான உபரசமும் சாரக்கெல் லாந்தான்

தோணவே யுள்விழியால் நோக்கும் போது
　சொன்னபடி கேட்டுனக்குத் தொழில்கள் செய்யும்
வீணான மாயையாலா ணவமே மிஞ்சி
　வீணைப்போ லலையாதே விழலா காதே
கோணாக வுன்மனியி லிருந்து வாழும்
　குருபரனை யறிந்துகொண்டு கோபந் தள்ளே. 13

கோபத்தா லிறந்தவர்கள் கோடா கோடி
　கொடுமைகொண் டலைந்தவர்கள் கோடா கோடி
பாபத்தால் வருங்கொடுமை தனைக்கா ணாமல்
　படுபாவி மாய்கைதனில் பட்டார் கோடி
தாகத்தால் கானல்தனை நீரென் றெண்ணித்
　தவித்தலைந்த மான்போலச் சாவா வண்ணம்
பாபத்தை வேரறுக்க வழியைக் காட்டும்
　பரமகுரு பாதத்தைக் கதியென் றெண்ணே. 14

எண்ணியே யுடல்பொரு ளாவி மூன்றும்
　ஏகமன தாயவர்க்குத் தத்தஞ் செய்து
கண்ணியனாய்க் கரிசனுட பொருளைக் கேட்டுக்
　கருவறிந்து பொருள்தெரிந்து கருத்தா யுன்னிப்
பண்ணியதோர் மருந்துகட்குச் சாபந் தீர்த்துப்
　பழவினையி னிலையறிந்து பரிகா ரஞ்செய்
தெண்ணியதோ ரெண்ணமெல்லாம் பலித மாக
　இயம்புகின்றேன் பஞ்சசூத மெழுகாதி தானே. 15

### பஞ்சசூத மெழுகு.

ஆதியாய் வேதாந்தப் பொருளாய் நின்ற
　அன்பான மகேஸ்வரனைப் பணிந்து போற்றிச்
சோதியாய் விளங்குகின்ற ஆத்தாள் பாதம்
　துணையாகக் கருத்தில்வைத்துத் துன்பம் நீங்க
நீதியாய்ப் பெரியோர்கள் பாதம் போற்றி
　நினைவுதனில் மறவாமல் சுருக்க மாக

வாதியென்று பேரெடுத்து வந்தோர்க் கெல்லாம்
வசனித்தே னவிழ்தமொன்று வசனித் தேனே. 16

வசமான வாண்குறியும் வராகன் ரெண்டு
வகையான நட்சத்திரம் வராகன் ரெண்டு
எசமானும் வராகன்ரெண்டு சிந்தூரம் ரெண்டு
இனிரெண்டு ஏகவைத்துக் காண்டி விட்டு
ரசமான நெருஞ்சியின்சார் முருங்கைப் பூச்சார்
நாரியின்பா லிம்மூன்றும் சுருங்கக் கிண்டி
நிசமாக வரைக்கமெழு காகும் பாரு
நியமமுட னெடுத்ததனைப் பூசை பண்ணே. 17

பண்ணவே கணபதிக்கும் மஹேஸ்வ ரிக்கும்
பாங்காகப் பூசைசெய்து தொழுது கொண்டு
என்னமோ வென்றுசொல்லி யேங்க வேண்டாம்
இதமான பஞ்சரச மெழுகு தன்னை
உன்னிதமாய்ச் சித்தரெல்லா மொளித்தா ரப்பா
ஓகோகோ வதன்பெருமை யென்ன சொல்வேன்
சன்னியென்ற பதின்மூன்று மிதன்பேர் சொல்லத்
தலைகாட்டா தோடும்பார் க்ஷணத்தில் தானே. 18

அநுபானம்.

பாரப்பா அநுபானங் கூறக் கேளு
பாங்குபெறக் கலசப்பால் கொடுத்தா யானல்
நேரப்பா சன்னிபதின் மூன்றுந் தீரும்
நேரில்லாத் தோஷமேழுந் தீரும் பாரு
சாரப்பா யிசிவுமுதல் சாந்த மாகும்
சகலசுரம் விட்டோடும் தப்பா தப்பா
கூரப்பா சிஷ்யனென்று வந்தா னானல்
கூறுவாய் நிர்மூடர்க் கீந்தி டாதே. 19

ஆமப்பா வஜ்ரவல்லிக் கியாழந் தன்னில்
அப்பனே குன்மமது வெட்டுந் தீரும்

வாமப்பா சித்ரமூலக் கியாழந் தன்னில்
மைந்தனே சூலைமுதல் முடக்கு வாயு
வேமப்பா கிரந்தியோ டரையாப் பெல்லாம்
வெகுசுருக்கு மிளகுபொடி தன்னிற் கொள்ள
நாமப்பா சொல்லிவிட்டோ மென்று சொல்லி
நவகோடி சித்த ரெல்லா மெச்சினாரே.

மெச்சினா ரவிழ்தமிதை யுண்ட பேர்க்கு
வேதனைக ளில்லையப்பா வுலகிற் றானே
கச்சிதமா யொருபுறத்தி னின்ற வாயு
கனமான கால்கைக ணச்சு வாயு
உச்சிதமாய் மார்நோய்குண் டலியின் வாயு
ஒருபக்கம் சூலையது ஒன்ப துந்தான்
அச்சமறப் பயந்தோடு முலகிற் றானே
அருளினோம் வேதமுனி யன்பாய்க் கேளே.

கேளப்பா வலிப்பைந்துந் திருந் தீரும்
கெடியான நாசிகா பீட வாயு
வேளப்பா வெள்ளுள்ளி தைலந் தன்னில்
விதமான பணவெடைதான் கொடுத்தா யானால்
கோளப்பா பதறுசன்னி தொண்ணூற் றாறும்
கொடியசன்னி பிறவலிப்பு தோஷந் தீரும்
நாளப்பா அநுபான மறிந்து செய்தால்
நாடாது பில்லிவஞ்ச நயந்து பாரே. 2

நயந்துபார் தூதுவளைக் கியாழந் தன்னில்
நன்றாகப் பத்துநாள் கொடுத்தா யானால்
நயந்துபார் காசமொடு மேல்சு வாசம்
நலமான உப்பிசங்க ளீளை ரோகம்
வியந்துபார் விக்கலொடு கக்கல் மூர்ச்சை
விதவிதமாய் ரத்தமொடு பித்த காசம்
நயந்துபார் மந்தார காச மெல்லாம்
நாடாது கபவாத தோஷந் தானே. 23

தானென்ற திப்பிலிதே னுள்ளே கொண்டால்
தவறாத வண்டுகடி பதினெண் குட்டம்
கானென்ற புண்சூலை கிரந்தி சூலை
கைகண்ட நோய்களெலாங் கழன்றே போகும்
வானென்ற வைத்தியர்க்காய்ச் சொன்னோ மப்பா
மைந்தனே யிம்முறைதான் மடையர்க் காகா
நானென்ற ஆணவமே பேச வேண்டாம்
நானிலத்தி லதீதமிந்த மெழுக தாமே. 24

### தலைமுழுக - பஞ்சமூல கற்பம்.

மிருகமதம் பித்தமணி வேம்புதிரி பலாதி
கரியநிறம் பாலரைத்துக் காய்ச்சி-சிரசிலி
விண்கற்ப முண்டு விஷமானோர்க் கெல்லாம்
நண்கற்ப மென்றே நவில். 25

### இராஜபேதி மெழுகு.

ஆறுமருந் துப்பு ஆதிவஜ்ஜி ராயுதமும்
சாரு மரிசஞ் சமன்மூன்றும்-நீரும்
அரைத்து மணிமணியாக ஆனசிசு விருத்தர்
துரைத்தனவி ரேசனமாந் துதி. 26

### விஷபேதி ஜன்னிதோஷங்களுக்கு மெழுகு.

சிரக்குமாண்குறி சிவன்விந்து வெற்றிசெறி பவனும்
அரன்பூசைக் கேற்றவனல் தீபமாகு மிவ்வைவரையும்
சரிபாகமே யளிக்கோளுங் கல்லிலாட்டித் தந்திடநல்
அரவார்கடிவிஷம் பேதியும் வாதமறுஞ் சன்னியே. 27

### திரிபுரை சிந்தூரம்.

ஆகாசம் நட்சத்திரம் ஆதிசிந் தூரமூன்றும்
சாகாரோமஞ் சுற்றித் தானதின்மேல்-வாகான
வத்திரைசுற்றி வயசட்டி மீதுவைத்துப்
பத்திரமா யெண்ணெய் படி. 28

படிவிட்டுப் பொட்டணத்தில் பக்குவமாய்த் தீபமிடக்
கடிதா யெரிந்தடங்குங் கண்டு - துடியான

சுத்திகல்வம் பொடித்துச் சுயதேனி லுண்பவர்க்குச்
சத்திவலி சுரநோய்போந் தான். 29

### விதவையைக் கூடிப் பிள்ளையில்லா திருக்க.

வீருன *முதலிவித்து கழஞ்சு நாலு
விழுதுபட வேயரைத்து வெல்லங் கூட்டிச்
சேராத சூதகத்தின் மூன்று நாளும்
செயலுடனே விழுங்கிவிட மலடி யாவாள்
தூரான விபசாரி நூவிழுந் தோர்க்குச்
சொன்னதல்லால் மற்றோர்க்குச் சொன்னால் பாவம்
பேரான மங்கையர்க டமக்குக் கேளு
மரணம்வரை குழவியில்லை மனத்திற் காணே. 30

### பஞ்சரசக் குளிகை.

பிரிதிவப்பு தேயு பெலவாயு வாகாயம்
கரியபஞ்ச பூத சரக்குவகை - நிறைசமமாய்
மிளகு சிறுகீரை மேல்தோன்றி விட்டரைத்து
நலமல்லி பிரமாண நாட்டு. 31

நாட்டி நிழல்காய்ந்து நாரணிபூசை புரிந்து
தாட்டிக வெட்டை சுரநோய்தாம் - பூட்டிடவே
பத்தியமோ வில்லை பாலன்ன முண்பார்க்குச்
சத்திபஞ்ச பூதமிது தான். 32

### பஞ்சரசச் சுன்னம்.

நாதம்விந்து வன்னி நட்சத்திரம் தைரியமும்
ஓதுமைந்துஞ் சுத்தித் தோர்நிறையாய்-நாதமது
ஒன்றாகுஞ் சேடமரை யொழுங்காய் நிறுத்தரைத்து
நன்றாய்ப் பூமறைப்பில் நடு. 33

நடுவாய்ப் புடங்கோழி நற்சில் காய்ந்திட்டு
வடுவிலுயர் வெள்ளை மாசுண்மாம் - முடிவான
எல்லா வியாதியும்போ மேகாத தொன்றில்லை
நல்லாய் பஞ்சரசம் நாட்டு. 34

---

* காசுருக்குவித்து என்று ஒருபிரதியி லிருக்கின்றது.

### பட்டுக் கறுப்பு-ரசசிந்தூரம்.

நாதமொன்று விந்துமூக்கால் நல்லவெள்ளை தானரையாம்
வீதமா மூந்தெண்ணெய் மெழுகுருட்டி—ஓதுசித்தர்
மூலமரைத் தப்பி முழுப்பட்டுசுற்றி சுன்னச்
சீலைசுற்றி மண்பொதிந்து செய். 35

செய்காயின் துமியில்வைத்துச் செய்யரை நாளுமெரித்து
ஐயமிலாது பொடித்து யாவர்க்கு—மெய்யான
அநுபானங் கண்டளிக்க நோய்போ யகலும்
மனுக்கறுப்பு தீரும் தீ. 36

### வெடியுப்புச் சிந்தூரம்.

ஓரைந்து கப்ப லோதுபடை ராஜனுப்பு
காரகுகை யிட்டுதக் கனசிவப்பாம்—பாரின்நோய்
வலிவாந்தி நீர்க்குத்தல் வல்பிணியா வுந்தீரும்
பலிசெய்வெடி சிந்தூரம் பண். 37

### கருவங்க சிந்தூரம்.

குகையிருந்த கப்பலதைக் குண்டுசெட்டி யிட்டுருக்கி
வகையாலம் விழுதுகட்டி வறுத்தெடுத்து—மிகவதின்சார்
வார்த்தரைத்துப் பில்லைசெய்து வாருமுழுப் புடமிடவே
கார்வங்கச் சிந்தூரங் காண். 38

காணுமிதை யுண்ணக் கைகால் வெடிகறுப்பு
தோணுந்தேகப் படர்ச்சிதோல் மேகம்—நாணமுற்று
இருந்த திசைசொல்லா தோடுமிதை யுண்டிடவே
பொருந்து பத்யமில்லை பூண். 39

### விந்துநாத சிந்தூரம்.

விந்துநாத மிரண்டுவிதஞ் சமனரைத் தெடுத்துப்
பந்தமிரு நேரம் பசுவெண்ணெய்—தொந்தமுண்ண
வந்தவெட்டை மேகம் வளர்நீர்க்குத் தல்விலகும்
விந்துசிந்தூ ரம்மிதுவா மேல். 40

### சூதவாத சிந்தூரம்.

வஞ்சக நாற்றஞ்சமமாய் வாகாக் குகையி லிட்டுக்
கொஞ்சமேன்மூடிக் கொடுத் தூத—மிஞ்சுகிலா
சிவயமாஞ் சிந்தூரமதைச் சீழ்வெட்டை சூலரணம்
கவிப்பான நோய்க்கிந்து காண். 41

### வீராச கற்பூரம் தங்கம்.

நட்சத்திரம் பலமும் இரவுதிரம் பலமெடுத்துப்
பட்சகுன்ம கோடாலி பருகுகைக்குள்-குக்ஷிவைத்து
மணலிட்டு மேல்மூடி மாகவசஞ் செய்தெரிக்கத்
தினமரையு மாகித் திற. 42

திறந்துபன்றி ரோமத்தால் சிந்தா துரையெடுத்து
அறவெல்லத் தன்னிலதி வாயு—பாபாக்கும்
மேகவரிப் பண்சூலை மேல்மறப்பு வாயுமுதல்
[illegible]
சாரபிடை காட்டுஞ் சரம். 43

### வெடிசாரச் சுன்னம்.

படிகம் செடிபலமாம் பகர்கிரக சாரம்ரெண்டு
துடிநாற் பலமதனைத் தொந்தித்து—மடிநுணுக்கிக்
கலசமிட்டுக் காய்ந்துமுழக் காஷ்டமிட் டெடுக்க
நல்சுன்ன மாகு நனி. 44

நனியாமிச் சுன்னத்தால் நாடாநோய் கேளும்
தனிக்கு தகக்கட்டி தாளாது—பனியதுபோல்
இனிவாரா தோடு மிதுகாணீ ரைப்பிரிக்கும்
துனியான சுன்னமிது கல். 45

### வீரக்கருவங்கக் களிம்பு.

பீறட்கி மைக்தன்மேல் கடுங்கப்பல் சமமாய்த்
தானுள் வன்றகுந்தன் நெய்தன்னில்—தேன்போல்
பாகமதா பரைத்துப் படர்தா மரைரணத்தில்
சாதவிடு பாரிதைச் சரி. 46

### சகல ரணநோய்க்குத் திரி.

ஆகாயம் நட்சத்திரம் ஆகவிரண் டுஞ்சமனாய்
வாகாவா வின்கிருதம் வார்த்தரைத்துப்—பாகான
மெழுகுசீலை யிற்றடவித் தீபம்நோக் கிடவே
அழுகுநோய் பேய்போ மறி. 47

### அண்டநோய் தீர.

நல்லவேளைப் பூண்டு நறுக்கிச் சரிபாகய [லரிய
வல்லதேன் மூன்றுமொன்றாய் வார்கலந்து—சொல்
அண்டநோ யாளர்க் கப்பினாட் டிக்கொடுக்க
கண்டவுடன் சுருங்குமிதைக் காண். 48

### சர்வநோய்க்கும் ரசசிந்தூரம்.

சூதமொன்று நாதமரை சோர்பிதகங் காலாம்
வீதமிது வாய்திறத்து வென்றிகல்வும்—நாதமிட்டுப்
பாதகத்தை விட்டுப் பாலநீர் விட்டரைத்துப்
பூதபிங்கா ணிட்டிவை போற்று. 49

போற்றிய சூதம்விட்டுப் பிங்கான்மேல் மூடி
காற்றிரவி காய்ந்துகண் சட்டி—ஆற்றுமணல்
இட்டுமேற் பார்த்தெரியை யெரிநான்கு சாமமதை
விட்டுப்பார் சிந்தூரம் விண். 50

விண்மேகசூலை வெட்டை கபங் கிரந்தி
குண்புண் விரைவாயு கோதையரால்—பண்ணுகின்ற
விந்துநஷ்டந் தீரும் வேண்டுபத்ய மில்லை
தந்திடுநல் ரத்தவிர்த்தி தான். 51

தானான சிந்தூரம் தங்கமா மேனி
ஞானாநந்தம் போராகு நானிலத்தில்—கோனான
காயந்தான் கற்பம் காணாது நோய்களுநெய்
நேயதே னிருநேர நேர். 52

## இரச சிந்தூரம்.

சூரன்பா லிங்கம் பூரம் விரடை
தீரவோட்டுக் காந்தம் செயமிளகு—திரமதுரம்
இம்மூன்றும் விரடை இரண்டும் இட்டைமத்தன்சார்
தம்குகையாய்ச் செய்து தனி. 53

தனியா யிதனுட்சூதம் தாக்குவிரடை ரெண்டு
இனிக்கவசமேழு மெடுத்து நன்ருய்—முனியாமல்
முழப்புடத்தில் வைத்தெடுக்க முன்குகைக்குள் சூதம்
அழசுன்ன மாகு மெடு. 54

எடுத்தரசம் பத்து விதமொன்று சுன்னமிட்டுக்
கொடுத்தூதப் பூர்க்குங் குறையாது—எடுத்துருக்க
இரசவெள்ளி மாற்றுயர்வா மின்னம்பல நோய்க்குத்
திரமா யரிசியெடை தின். 55

தின்னுன சுன்னம் தீர்க்கும்வாயு மேகம்
நண்ணுக் குலேவலிநோய் நாடாது—கண்ணுன
பரீட்சைபார் முன்னில் பலிக்குங் குருவருளால்
அரிசுன்ன மாமிதை யறி. 56

## வேறு ரச சிந்தூரம்.

சூதசிந்தூரம் விரடை சூரனுங்கால் விரடை
பேதமிலாச் சுத்தித்துப் பேணியரை—வாதவலி
வாய்வெண் பதும்போம் வாரிப் பசியெடுக்கும்
தீயுநோய் யாவுமிது தின். 57

## சொர்ணசார சிந்தூரம்.

கஞ்சூதம் வெண்டி வகையோர் பலமாய்க்
கள்ளமிலா துருக்கிக் கலந்திரண்டும்—நல்லகல்வம்
இட்டு வஜ்ஜிரச்சா ரிழைக்கநவ நீதமுமாம்
வட்டுருட்டிப் பார்த்தலம்பி வை. 58

வைப்பூரம் சூரன் மாசீனம் சாரம்
நையாவும் சேர நாட்டியரை—மைசீசா

சிலைபத்து செய்சேர்ந் தடைத்துவாய் திறந்து
வேலைசட்டி மீதுமணல் வேய். 59

வேய்வாய் சொருவில் வேண்டிவை மணலையிட்டு
ஆய்வாய் கழுத்தடிமண் ணாகவிட்டு—நேயமுடன்
சாமநாலு மெரிக்கத் தங்கம்போல் பஞ்சவர்ணம்
ஏமசிந் தூர மெடு. 60

எடுத்தெந்த நோய்க்கு மிடையூறில் லாமால்
கொடுநெய் தேன்வெண்ணெய் குணமறிந்து— படுநோய்கள்
சொன்னசாரமென்று சொன்னாரென் குரு முருகன்
வர்ணசிந் தூரமாம் வகை. 61

## வீரச் சுன்னம்.

சூரன்சூத னிரண்டும் சூழநிறை சமமாய்ச்
சேரப் பொடித்தகலில் சேரவைத்துப்—பார்கவசம்
செய்தடுப்பேற் றித்தீபஞ் சேரநாற் சாமமெரி
கைதனத்திற் சுன்னமெடு காண். 62

காண்கருப் புட்டி கவசமதிற் கொடுக்கத்
தோணாது வாயுதொல் மேகம்—வீணான
துர்நோயா வுந்திரும் தூயசுன்ன மாயிதுவும்
கருவாளி யானால்நீ காண். 63

## வெடியுப்புக் கட்டுச் சுன்னம்.

வெடியொன்று படியரையாய் வெந்தசட்டி யில்லுருக்கிக்
கெடிகெடியாய் மும்முறைகெ ணித்துருக்கித்—துடியான
தங்கநிற மாம்பதத்தில் தான்சாய்த் தகலூற்ற
பங்கமிலா தந்தமதாம் பார். 64

பாரானை தந்தம்போல் பளிங்கான விக்கட்டை
சேருநீ கடைப்புடனே தேனிலிட—ஊர்வாயு
எல்லா மகலுமினி யநுபாகம் மறிந்தால்
பொல்லாத நோயோடுமிப் பூ. 65

## தாளக சிந்தூரம்.

ஓதகம்போ லொளிமிகுந்த சுவாச காச
மோடுதற்குச் சிந்தூர முரைக்கக் கேளு
பாதகத்தைத் தினம்பொடித்து வயச்சட்டி யிட்டுப்
பாருநீ சுகதுக்கப் பச்சிலைச்சார் பெய்து
சாதகமா யுலையிட்டுச் சார்சுருங்கத் தேய்க்கச்
சாமிகுக னருள்தன்னாற் றளதளென வுருகும்
தீதகலப் பலகைதனி விட்டுநன்றாய்ப் பொடித்துத்
திங்குள்ள காசமெலாம் தீருநா ளீயே. 66

## திரிநட்சத்திர பதங்கம்.

மும்மகர மெற்சுண்ணம் முடிவா மிடைநிரதம்
கொம்மைமுலை மாதேவி குழன்முடிப்பூ— சிம்மம்
தலைநாலுங் கூட்டித் தான்கவசஞ் செய்துலர்த்தி
நிலைதீயின் மேலெடுக்க நீர். 67

நீறின சுன்னமின்னம் நீட்டித்தீ யைந்துதரம்
வாரியெடுத் தெரிக்கமா சுன்னமாப்—தேரியுண்
பாலர்முதல் சகல பாட்டறே யாவுமினி
காலன்கால் கிட்டாது காண். 68

## தைரிய நட்சத்திரக் கட்டு.

சூரன்பூர மிரண்டுஞ் சுக்கரைத் தெழுவகையாய்ச்
சீர்கவசஞ் செய்தீபஞ் சேர்வட்டிட்—பார்சத்த
கேட்டவுடன் வேறு கெடிகவச மிப்படியே
வாட்டியெழு தரம்பார்த்து வை. 69

வைகட்டா மித்தை வாகநபா னம்மறிந்து
கைகுழந்தை யாவர்க்கும் கண்டிழைக்க—நையுநோய்
சட்டிசுட்ட கையதுபோல் சாருலைநீங் கியநோய்
அட்டியிலா தோடு மறி. 70

### வெள்வங்கக் குரு.

ஆகாயம் நட்சத்திரம் ஆகிய காடிகாரம்
வாகாய் நிறைசரியா யிவைபொடித்துத்—தீக்காய்ந்த
சட்டியில் மணலிட்டுச் சாரியதன் மேல்மருந்து
அட்டியிலாச் சீலைசெய் தறி. 71

அறிந்தடுப்பி லோர்சாமம் அதையெடுத்து வேறுசட்டி
புரிலவண மிட்டதன்மேல்பொடிவைத்துச்—சரிசாமம்
இப்படிமூன் றும்மடக்கேற் றியெடுக்க வங்கமதில்
கைப்பிடிபத் தொன்றீயக் காண். 72

காணும் வங்கம்பத்தில் கட்டிச்சுன்ன மொன்றீயத்
தோணுமக்குவெள்ளி மாற்றெட்டாம் சோர்வில்லை—காருங்
குருமுறை தப்பாது குணமாகச் செய்பவர்க்கு [காண்
வறுமையிலை நன்மையில்வாழ் வான். 73

### சீன நட்சத்திர பஸ்பம்.

நீர்க்குத்தல் வெட்டை நிலையில்லா தோடுதற்குப்
பார்ப்படிகம் நட்சத்ரம் பகர்சமமாம்—நேரான
ஆவெண் ணெயிலரைத் தங்கியொடு ஜாண்புடமாம்
நீவெண்ணெயி லுண்டிடுவாய் நேர். 74

### சூதவஞ்சக சிந்தூரம்.

சூதசிந்தூ ரம்பலமாம் சொல்தயிரீ யஞ்சமமாம்
பேதமறச் சுத்திசெய்து பேணிகல்வம்—சாதகமாய்ப்
பொடித்துநெய் தேனிலுண்ணப் பொல்லாவாயு மலத்தை
இடித்துப் பசியுண்டா மிது. 75

### வெள்ளி சிந்தூரம்.

இரசித சிந்தூர மின்புற்றுக் கேண்மின்
நிரைரூபா யெடைவெள்ளி நீயெடுத்து—அறவுருக்கிக்
குடுக்கைசெய்து சூதமலம் கொண்டடை தமரிட்டு
இடுவயக் கம்பியிதன்மே லீ. 76

ஈவா யதிற்கட்டி யிடுநாதஞ் சேர்பொடித்து
மாகுடத்தன் மத்தியிட்டு வாகதன்மேல்—தாவாமல்
மேற்குருக்கை கம்பியிட்டு மேற்கவசஞ் செய்தடுப்பில்
காலறிந்தோர் சாமமெறி காண்.

காணுமிர சதிக்குடுக்கை கண்கொள்ளாச் சிந்தூரம்
பூண வவிழ்த்தெடுத்துப் பூசித்துத்—தோணுகின்ற
நோய்விலகுந் தேக நோவாது ரத்தவிர்த்தி
வாய்க்கினிது கற்பமிதாம் வை.

திரிசூதப் புகை.

சிந்தூரம் பூரம் செயசூரன் விரடைசமன்
பந்து புரமெரித்தான் பாலிலரை—தந்துரவி
காட்டிப் பொடியெடுத்துக் காண்புளி பரணியனல்
வாட்டிபுகை கரணங்காட்ட வை.

வைப்பா ரண்டப்புற்று வகைகெட்ட யோனிப்புற்று
நைமூலப் பவுத்திரமு நாணிடுமே— மையவினால்
வந்தவெட்டை கிரந்திமாறி விடுமிம் மகாபுகை
தந்தகுக னடிமலரைச் சார்.

சர்வவிஷ ஜன்னிபேய்க்கு ஆக்கிராணம்.

கண்டனைசுட் டந்நிறைக்குக் காணுஞ் சிவப்புக்காவி
ரெண்டையு மொன்றாய்ப் பொடித்து—மண்டைசுற்றும்
பித்தவிடஞ் சன்னிபிரமை பேச்சடங்கிச் சொக்கும்பேய்
கத்தவிடும் தேள்விடம்போங் காண்.

பேய் நோயுண்டாகக் குளிகை.

நாபிகௌரி வெள்ளை நாடரிச்சுக் கான்சுன்னம்
பாபினிலை சமனாய்ப் பார்மத்த—னிலைச்சார்
விட்டரைநீ குளிகைமணி வீதமிடு பகையாளி
கெட்டவர்க் கீடுகொடு கேள்.

கேளாமது முதலாய்க் கேலியுரை பலநோயும்
வாளாயுத குடலை வாட்டுமது—கோளான

நீலியின்வேர் வியாழம் நீட்ட வியாதியிலே
கூலிகொடா தார்க்குக் கொடு. 83

நீரிழிவுண்டாக்கு மீடு.

நீரிழிவுண் டாக்க நீபார் காட்டோனுன்
பார்த்திலையைச் சாணிக்குள் பஸ்பித்துச்—சீர்மறந்த
போக்கிய நீரிழிவாம் பேதிக்கு மூடல்பற்பம்
ஆர்க்கிய நோய்போ மறி. 84

கருவங்கச் சிந்தூர பற்பமுறை.

திருவாகத் தேகமது செப்பக்கேள் பஸ்பமொன்று
கருவங்கச் சிந்தூரங் கண்டெடுத்து—குருபஸ்பம்
இரண்டும் புகைநீரா லினியகல்வத் தரைத்து
இரண்டோட்டிற் சிலைசெய் திரம். 85

திரமாய் முழப்புடத்தில் தீதில்லா வெண்ணீராம்
உரமாய்ப் பொடித்தெடுத் துள்ளகுரு—பரன்பூசை
செய்நோய் பேய்மேகம் திசைவிட் டகன்றுவிடும்
கைகண்ட பஸ்பமிது காண். 86

காணும்வெட்டை பாண்டு கால்பிடிப்பு கிராணிரத்தம்
நாணுரண்டு மேகநற் கிரந்தி—பிணலிங்கப்
புற்று யோனிப்புற்றுப் பெண்ணு ணிருவர்க்கும்
சுத்தகரு வங்கபற்பம் சொல். 87

கருவங்கச் சுன்னம்.

ஓரைந்து கற்பமது உறுதியா மிக்காயம்
நேரடிவிட்டைப் பழச்சார் நேரரைத்துக்—கார்வங்கம்
தகட்டிற்பூசி முழத்தின் தக்கபுட மிடச்சுன்னம்
செகசிற்றே ரண்டசுன்னஞ் சேர். 88

சேர்த்திரண் டொன்றாக்கி ஜெயநீரால் மையவரைத்து
வார்காசெடை கனமாய் மாவில்லைசெய்—நீர்காய்ந்து
முழப்புடமிட் டெடுசுன்னம் மூர்க்கவியாதி விலகும்
பழந்தேகம் பாலியமாம் பார். 89

## ஆலாத்தி கற்பூர வைப்பு.

ஆலாத்தி கற்பூர மிதின்வைப்பு வகைவிவரம்
பாரேழாங் காய்ச்சல் வெடியுப்பு பலமெட்டாம்—நேர்கூடன்
பாதியிட் டிரண்டுமொன்ருய்ப் பாரித் தரைமூங்கிற்
சாதிகுழலி லடைத்துச் சார். 90

சாலிநெல் வைத்ததற்குள் தலைமூடி யோர்திங்கள்
பாலித் ததைப்பார்க்கப் பக்குவமாம்—சோலியலா
வாதவித்தை யாஞ்கூடம் வைப்பறிந்தோரின் வருகை
பாதகமெல் லாந்தீரும் பார். 91

## கருவங்க பற்பம்.

கருவங்க பற்பங்கா ணிப்போ துரைப்பேன்
கருவங்க மொன்றற்குக் கால்சாரம்—குருசுன்னம்
நீர்விட் டரைத்தப்பி நீள்கவச முழப்புடமாய்
கூர்வங்க மதையெடுத்துக் கொள். 92

கொள்குரு நீர்விட்டுக் கோதில்சிலா சத்துவெட்டிச்
சொல்லிரண்டு மாட்டியரைத் தோர்காசாய்—வில்லைசெய்து
காய்ந்துமுழப் புடமிடவே காசினியி னேய்விலகும்
தேய்ந்தவுடல் கர்ப்பவனு தேர். 93

## தேள்விடந்தீர ஜயநீர்.

கண்டன் கற்பூரம் சமன்கல்வ மதிற்பொடித்து
கொண்டுநல்ல நீர்விட்டுக் குலுக்கியதை—அண்டைகூட்டும்
தேள்விடத்தின் வாயில் தெரிந்தோர் துளிகைவிட
ஆள்கிரிப்பான் பார்த்தே யறி. 94

## பூரபற்பச் சுன்னம்.

நட்சத்திரம் சூதம் காசண்டன் ஒன்றரைக்கால்
பட்சிஜயநீரா லரைத்துப் பார்குகைவை—நிச்சயமாய்
மெள்ளவூ திப்புகையை மேலாகா மற்கனலில்
கொள்ளபூர பற்பமிதைக் கொள். 95

கொள்வாயு புண்வெட்டை கொடிய கிரந்திசூலை
நல்லதேக வெள்ளைரண நாடாது—கொள்ளுமுன்னே
நோய்விட் டகன்றுவிடு நோயிலாப் பூரம்
தாயென்பார் மிக்கோர் தனி. 96

## மேற்படி பற்பம்.

சூதனரை வீரன்கால் சொல்பூர மொன்று
சீதஜய நீராட்டிக் கெடிகுகைவை—சாதகமாய்
வைபுகையா றாதி மறுத்தக் கினியில்லை
கைபாகம் வெள்ளைவருங் காண். 97

காணவிதை புண்பார்க்குக் கால்பிடிப்பு வெட்டை
தோணுங் கிரந்திபுண் றூரம்போம்—பூணரிய
பால்ர்யார்க்குங் கொடுக்கப் பத்தியமே யிங்கில்லை
ஞாலம்புகழ் பூரபஸ்பம் நாட்டு. 98

## நீரிழிவு.

தெங்கின்பாளை வாழைப்பூ சினத்தமாதுளை பாதிரி வேர், பொங்குமுலைப்பால் புடமிட்டுப் புதியாவிமையம் மேல்தூவி, செங்கண்சிவந்த விதியாரே தேன்விட்டருந்த வல்லீரேல், அங்கங்கெடுத்த நீரிழிவு மன்றேதீரும் கண்டீரே. 99

## வீர சிந்தூரம்.

பாறைஸ் பட்டசுப்பும் பாகமிடை தைரியமும்
கார்கன்னி கலசப்பால் காட்டியரை—சீர்நிறமும்
பவளமிதற் கொவ்வா பதனமா யுண்ணேயும்
திவலையிலா தோடுந் திடம். 100

## அயக்காந்த மெழுகு.

மங்களமா யயமெழுகை மகிழ்வாய்க் கேளும்
மணிகருக்கு விடயமிஞ்சி ரத்தங் குன்றித்
தங்கிமலந் தீய்ந்து வயிற்றுவலி யுண்டாகித்
தணிவதற்குச் சாக்குவகை சமமாய்க் கேளு

அங்கியிட்ட எணவதுவும் அதன்தாயி வாறு
னழகுமிகு திரிகடுகு திரிப லாதி
பங்கமிலாக் கோக்கணிச்சார் ரெண்டு சாமம்
பதியவரை வகைக்குபதம் பலமாம் பாரே. 101

பாரேநீ பின்னும் பொடித்தெடுத்துப்
பாங்குகருப் புட்டிமுட்டிச் சமமாய்ச் சேர்த்துச்
சாரேநீ நிறையவிட்டுக் குழைத்து எண்ணெய்
சரிபடிகால் விட்டெரிக்க மெழுகாம் நல்ல
வாரேநீ பூசித்துக் கழற்சி வீதம்
வார்மிகுந்துண் பார்க்குப்பத் தியமே யில்லை
மாறுநல் மனச்சுடரோன் கீரை சேர்க்க
வாயுமுதற் றீர்ந்திரத்த வடிவாம் பாரே. 102

### பட்சவாத முதல் சகல வாய்விற்கும் மருந்து.

விதிபிறந்த பதியதனைக் கண்டெடுத்துப்
பினாரிசமன் கூட்டியிள நீர்விட் டரைத்து
முதிர்முளரி வித்தெனவே யுண்டை செய்
துரைக்கவினி யனுபான வுண்மை கேளு
ததியுரையா முன்பதியி லுரைத்தா யாகில்
தக்கதொரு பெருவாயு பட்சவாதம்
பதியைவிட்டு நரம்பெல்லா முறுக்க மேறிப்
பண்டுபோல் நடைகொடுக்கும் பரிட்சை பாரே.

### பால சந்திரோதய மாத்திரை.

காந்தரிப்பகை பொறிபூரம் தொடைகடை யாதி
சாந்தமொன்றது அரையது மூன்றது சம்பீரம்
தேர்ந்தரைத்திடு மணியள வாகுமித னுமம்
சாந்த சந்திரோதயமிது வழல்நோய் தரியாதே. 104

### காளி எண்ணெய்.

வாதாடுங்காளி வல்லாரைக் கண்ணியும் வறுத்தமுத்தும்
கோதாடுநெய்யு மிளநீரும் பாலும் குமரியன்னம்

போதாதெடைச் சமம்பூரஞ் சுமாரதில் போட்டருந்தச்
சூதாடும் வெட்டைகண மாந்தமேகந் தொலைந்திடுமே.

## அஷ்டபாலக சூரணம்.

இனியெடு நரம்புடன் மடந்தைமதி டங்கண மினத்துடன் கருஞ்சீரகம், இன்பமுட னெவ்வொரு வகைக்கு வொரு வராகனெடை யிடமான தந்தியதிலே, தனியெடு இரண்டுடன் வராகனெடை தகர்த்திடி தூள்செய் ததில், தகா துவர்ப்புக்கா யிரட்டிப்பு சேர்த்திட்டுத் தானரை யிரண்டுசாமம், கனியெனப் படர்பொடி யதுபான மதுவதில் கண்டுகொண் டேயருந்து, கனமான மலஜலம் கபகாசமீளையும் கதித்திடு வாதங்களும், பனிமேக மூமேவழ மறுபத்து நான்குசுரம் பாலர்க்கு வருநோய்களும், பறக்குமே பொடியிது அஷ்டபாலக சூரணமெனப் பண்டிதர்க் கருள்செய்ததே. 106

குறிப்பு :—

இனி - சூதம். நரம்பு - கந்தகம். மடந்தை - தாரம்.
டங்கணம் - வெங்காரம். மதி - இந்துப்பு.
தந்தி - வாளம். துவர் - கடுக்காய்.

## பஞ்சசூத உப்பு.

உப்பில் பஞ்சசூத முறைக்கக் கேளு
தப்பில் வெடிகரி கல்லுதானிந்து—அப்புநீர்
ஐந்தாம் பிருதிவப்பு ஆனதேய்வாய் விண்ணமற
சொந்தமுடன் கண்டறிந்து சொல். 107

## முப்பு ஜெயநீர்.

கார ஜெயநீர் கைபாகமாய்க் கூறுவேன்
நாரம் பனிரெண்டுபடி நற்பூநீர்—சேர்நிறைகேள்
இரண்டரையாஞ் சீன மெழுிற்சிப்பிச் சுன்னமிவை
குறிசே ரென்றேகால் குணம். 108

குணமாய் மூன்றும் பொடித்துக் கொண்டுமெரி
இளஞ்சிறுநீர் குறுணிவிட் டரைத்துக்—கனபூமி
புடமூன்று நாளிருத்திப் பின்னெடுக்க வேகொதிக்கும்
திடங்கார ஜயநீராந் திண். 109

திண்ணான விச்சயநீர் தேகந்தீண்டிற் புண்ணாம்
வண்ணா னிதின்பரீட்சை வகையமுக்கை—கண்ணாகப்
போட்டெடுக்கத் தின்றுவிடும் பூதசரக் கானவெல்லாம்
சீட்டுமு னெண்ணெய்நீங்கு நீர். 110

## நவலோக மாரண மெழுகு.

நாதம்சூதம் சாரம் நல்லவெள்ளை சீனம்வெடி
தீதில் வீரம்பூரம் தெரிந்தெட்டும்—ஓதுநிறை
சமமாகச் சம்பீரச் சாற்றிலரை மெழுகாய்
எமனாகும் லோக மிடு. 111

இடுலோகஞ் சமன்மெழுகை யேற்றித் தகட்டிற்பூசி
நடுமுழப் புடமிடவே நவலோகம்—படுபற்பம்
கெந்திசமன் வீரம்கள் கெனிதபழச் சாற்றில்முழம்
முந்திபுட மிடப்பற்ப மாம். 112

உண்டால் சகலவித முறுநோயா வும்விலகும்
கண்டா ரதிசயிப்பார் காயமது—நன்றாகும்
பத்தியமே யில்லை பாலர்முதல் ரத்தமுண்டாம்
சுத்திபற்பம் தேகபற்பஞ் சொல். 113

## லோகமாரண சுன்னம்.

அறவுமண் கனின்நாதம் அரவிந்து மடையன்நான்காம்.
ஒருபதம் பதமரைக்கா லொன்றதாய்ச் சேர்த்துக்கொண்டு
வருகுங்கோ ளரிமுன்நீரில் வார்த்தரைத் திட்டுவில்லை
எருவினில் புடத்தைப்போட் டெடுத்திடச் சுன்னமாமே.

ஆகுமிப் படியேவங்கம் அயமுதல் லோகமெல்லாம்
போகுமே நீறதாகும் பொன்னிதில் விளையுஞ்சொன்னேன்

பாகமாய்ச் சுருக்கறிந்து பாங்கதாய்ச் சுத்தித்தோர்க்குத்
தாகமாய் ரோகநீங்கித் தயிரியங் கற்பமாமே. 115

### அறுவகை சங்கத் திராவகம்.

பொட்டிலும் வளையலுப்பு பொருந்திய சீனக்காரம்
இட்டமாய் வெங்காரந்தா ணியல்நவாச் சாரமைந்தும்
கட்டளை யாகச்சேர்த்துக் கருதியே மயேந்திரத்தில்
திட்டமாய் வடிக்கச்சங்கத் திராவக மீதென்பாரே. 116

### மகாசங்கத் திராவகம்.

வெடிமதி கூர்மம்சாரம் விடமன்ன பேதிநீலி
படிகிபூ நாதநீறும் பலம்பொறி காரமீதோ
டரிதிரி யுபயம்ஏகம் ஐயரைக்காலோ ரையங்கால்
பதவுரைக் கால்மூன்றேகம் மறைபொடி படுவதாக
அதைவளை கடமுமீது அதில்வறு மைந்தோ டாறு
இடைவெளி தைலமாகு மிவைவரும் வாறுபோல
தரமதில் நீர்கள்சோறும் தனித்தனி லோகம்தாது
உரமுட னீரதாகு முபாசம் நீறிப்போகும்
மார்வலி அஷ்டகுன்மம் வலியொடு மேகஞ் சங்கம்
நீரினி லனேககோடி ரோகங்கள் நீங்குந்தாமே. 117

### பாண்டு, மகோதரம், வீக்கம், நீர்க்கட்டு இவற்றிற்கு சலமஞ்சரி சிந்தூரம்.

சலமஞ்சரி முறைகேள் சண்டைவெடி நான்குபலம்
கல்நார் மதஞ்சத்து காந்தமயம்—நல்கெந்தி
காரஞ்சீனஞ் சாரம் கற்காவி சங்குபொடி
பார்விரடை யிரண்டு பார். 118

பார்பொடி யுருக்குப் பாகமதில் கட்டிவிட்டுச்
சார்பாயிஞ்சி தேன்வெல்லந் தனிற்காசு—நேரிடையாய்த்
தாக்கு இருநேரந் தங்காது பாண்டுவர்க்கம்
வீக்கமுதல் தீரும் விரும்பு. 119

## அயவீர தசாங்க சிந்தூரம்.

கரியலோகந் தயிரீயம் காண்த சாங்கமுடன்
அரிய சிந்தூர மறிகுகனி—கரியுலகு
பலமொன்று மீனாட்சி பட்சமுள்ள மைந்தனென்று
கருகுமரி நீராற் கரை. 120

கரையவரைத் தேரவியிற் காய்ந்துகண் சட்டிதனில்
முறையாய்ப் புகையடங்க முன்வறுத்து—வுறவரைத்து
எடுக்கச் சிந்தூரமா யிதைப்பூசித் தினிகேள்
கொடுகடுகு திரிபலாதி கொள். 121

கொள்வால் மிளகொடு ரோகணி தந்தி
விள்வா யதிமதுரம் விரடைவகை—அள்ளிடித்துச்
சூரணத்தில் கோகனிச்சார் கூட்டியரை யொருநாள்
காரண சிந்தூரங் கல. 122

கலக்கு முறைகேள் கனபடைசூ ரணம்பத்து
கலசிந் தூரமொன்று கலந்தரைத்து—நிலைபூசித்
துலகில்பல வாய்வுமுடல் விஷபாண்டு குன்மம்
குலைகுலைந்து போம்பார் குணம். 123

குணமாம்பத் தியமில்லை கூசாமல் பிணியுண்ணக்
குணமாய் மலசலநோய்க் கூடகலும்—பணவெடைதேன்
கூட்டியுண்ண ரத்தவிர்த்தி கூடுந்தாது பலமாம்
நாட்டிமண் டலமுண் நரை. 124

நரையாவும் வாராது நற்றேகம் தான்கனகம்
முறையிருநே ரமுமுண்டு முனையில்வரத்—திரையகன்று
மால்மகனாய் வாழ்வாய் மாட்சிமையா யிவ்வுலகில்
கால்பலமாம் போகமுண்டு காண். 125

## வீரச் சுன்னம்.

எழுதாதி யம்பலத்தைக் கலசஞ் செய்து
எழிலைந்து பூதத்தி னடுவே வைத்துப்

பழுத்தபின்பு மீனாட்சி மைந்தன் தன்னைப்
பாய்ச்சிவிட்டு மேல்சட்டி கொண்டு மூடு
வழுத்துகின்றோங் கடுங்காரச் சுன்ன மாச்சு
மாநிலத்தில் முப்புகுரு விதற்கீடல்ல
சுழுத்திவிடா ஞானிமகன் செய்வான் பாரு
தொண்டை கட்டுஞ் சிலேத்துமநோய் தொலையுமன்றே.

## இந்துவர்ண மெழுகு.

விந்துவிந்து சிந்தூரநாதமொடு வீரமானசிவகாமி மால்தேவியும், வெள்ளைசிங்கி நட்சத்திரம்பகரும் வீறு மாண்குறியு மெட்டபின், சொந்தமான முருகன்புராண மரிதூபதீபமது சமனெடை, சுத்தியாவதிலை பாருபாருபரி சுத்தமான கலுவத்திலே, சிந்தைகொண்டு பதினான்கு மொன்றுபடச் சேர்த்தரைத்துவிடு தூளதாய்ச், சீக்கிரத்தி விருநாதமாமதனை சேருநாதகருத் தையிலமாய், முந்துவிட்டு மொரு சாமநாலுமரை போதுமாமெழு குளுந்ததாய், மோச மின்றிப் பணவெல்லமாசுபெற ஒங்குபத்தியமு மில்லையே.

இல்லையில்லைகப வாதசந்நிசுர மெட்டுகாசமொடு குட்டமும், ஏறுகின்றவிரை வாதசூலைரண வீளைதோஷவட்ட குன்மமும், சொல்லுகின்றதொரு மாரடைப்புநெடு சூதகத்தொடு மகோதரம், சோகைமஞ்சட் காமாலைசத்திவயிற் றெல்லைபோக்கொடு பவுத்திரம், கல்லடைப்பு குலைவலி கிரந்திபுரை கண்டமாலைசல தாரையில், கண்டநீரிழிவு குத்தலானமுகிற் காசரோகமுத லானவும், எல்லைவிட்டெழு கடல்கடந்துபிணி என்னபாடுபடு மறிகிலேன், இந்துவர்ண மெழு குகந்தநாளுமுயி ரெண்ணலாகுமிஃ துண்மையே.

உண்மையுண்மை தாயுரைத்த வுறுதிதன்னைப் பாரடா
உற்றதோர் சரக்குகட்கு முரியசுத்தி கேளதை
தண்மையான தில்லைதன்னில் நானுரைத்தேன் முன்னமே
வண்மைதன்னை நீயறிந்து வலிவுதள்ளி யுறவதாய்

நன்மையாகச் சேர்த்தரைக்க நல்லசாஸ்தி ரங்களாய்
எண்ணமிட்டுக் கவலைகொள்ளா திம்மருந்து செய்துகொ
கன்னமிட்ட கள்வர்போல எண்ணமிட்டுப் பற்றிநிற்கும்|ள்
வின்னப்பட்டு வியாதியெல்லா மெய்யைவிட்டு ஓடுமே.

ஓடுதற்குத் தாயைப்போற்றி யுன்னகத்திற் பூசைசெய்
வாடிடாதே யப்பனே மனதுள்ளே பணிந்துகொண்டு
பாடுபட்ட மெழுகதைப் பகரும்போது பத்தியம்
பகருகின்ற கடுகுமஞ்சள் மச்சம்வற்றல் நிலதநெய்
சாடுபிரம பத்திரம் சனியன்மாயை மதுவொடு
போதுநீக்கி நீயருந்தப் பிணிகளா லுழன்ற ஆவி
கூடுவிட்டுப் போனஜீவன் மீண்டுவந் துடல்புகும்
தோடணிந்த வீசர்பர்தம் தொண்டுசெய்து கண்டுகொள்.

கண்டுகண்டு தேருதற் காசான் வேண்டும்
பண்டுசெய்த நல்வினையு மீள வேண்டும்
பண்பான ராசியொடு கிரகம் வேண்டும்
தொண்டுசெய்து பெரியோரைப் பணியவேண்டும்
துஷ்டருட நேசத்தை நீக்க வேண்டும்
வண்டுநிகர் குழல்மாது வாலாம்பிகைப் பெண்
வாஞ்சையற்று நீதவங்கள் பண்ணு பண்ணே. 13

## திரிமூர்த்தி தீபம்.

பண்ணிப்பார் மாமரத்தின் படிகங் கேளு
பலமொன்றும் கடிதடத்துக் கிறைவனவ் வாறு
கண்ணிழந்த பகவானும் புஜண்ட ரோசை
கத்திவெட்டுக் காரனந்த னிடையே ருகன்
எண்ணியே பசும்பாலில் மூன்றுந் தம்பி
எடுத்துக்கொள் பலமொன்றுய்ச் சேர்ந்த கைத்துப்
புண்ணியமாய்த் திரிமூர்த்தி தீபங் காட்டில்
போகாத நோயெல்லாம் போகும் பாரே. 13

நோய்போக இன்னமொரு வீரங் கேளு
நுணுக்கமாய்த் திரிமூர்த்தி தீபம் போடு
காய்மாறிக் கனிந்தபழம் போலே யப்பா
கசடறவே நோய்களையுஞ் சண்ணுஞ் சண்ணும்
தாய்ப்பாலைக் காணாத சேயைப் போலத்
தளர்ந்துவிடும் நோயினுட வலிவு தானும்
பேய்பூதம் பில்லிமுதல் சகல ரோகம்
புகைபட்டால் போகுமடா கண்டு தேரே. 133

ஜலதோஷங்களுக்கு வெங்கார மாத்திரை.

வெண்பலித்திடு டங்கணத்தை வேகபூரிய தேகமாய்ப்
பெண்ணுரைத்திட ரக்கரித்திவம் பேசுமுந்திய திரட்டியாம்
கண்கவர்ந்திடு விருசகண்டமரை கடியமாடநிறை சுட்கமாய்ச்
சண்ணுமேசுர வாததோஷமல சகலரோகஅுஜவியாக்கிரமே.

கேசரிக்காய் லேகியம்.

ஆதிசிவன் வேதன்விஷ்ணு ஐவர்பதம் போற்றி
மேவியெனை யீன்றெடுத்த மேன்மையாள்—சோதிமயம்
அம்பிகையாள் பாதமதை யன்பாய்த் துதித்தேத்தி
நம்புபோர் லேகியத்தை நாட்டக்கேள்—வம்பில்லா
அம்பிகையாள் தன்னுடை யருங்கனியிற் சதமும்
நம்பிக்கை யாய்ப்பிழிந்து நாட்டக்கேள்—சம்பிரமதாய்க்
காண்டம் வடிகட்டிக் கல்மிஷமெல் லாம்போக்கித்
தாண்டவனார் சர்க்கரையைத் தான்கலந்து—ஐந்துபலம்
வலிய அடுப்பேற்றி வகைஜாதி யோர் விறகால்
சலியாம லேபாதி தான்சமைத்துப்—பொலிவான
கடையின் சரக்கைக் கணக்கா யுரைக்கக்கேள்
படியிலுளோர் கொண்டாடும் பார்மிளகு—துடியாக
நற்சீ ரகமிரண்டும் நாடும் பலமாகும்
பொற்கோஷ்டம் சுக்கு புகழ்பெரிய—கற்கம்
திப்பிலியுந் தாளிசமுஞ் சேர்ப்பாய் வகைக்குவகை
தப்பிதமே யில்லாமற் சாற்றக்கேள்— திக்கெனவே

விராகனெடை யாமேவுஞ் சாதிக்கா யதுவும்
வாறு யுரைத்தபடி வாங்கியே—வேதம்
ஜாதிபத் திரியுஞ் சமசமமாய் வாங்கிப்
பொன்போல் வறுத்ததனைப் பொடிசெய்து—சீலைதனில்
வடிகட்டிக் கொண்டு வைத்துமது ரச்சரக்கைத்
தனியாக வேபொடித்துத் தான்கூட்டித்—துடியாகப்
பாகத்னிற் றாவிப் பற்றும லேகிண்டி
வேகமுடன் கீழிறக்கி வெண்சாரை—நெய்யதனைத்
தாகமா யைந்துபலம் தான்விட்டுக் கிண்டியதைக்
கேவலமென் றெண்ணாதே கேள்மகனே—ஓதுகிறேன்
ஆதிவிக் னேஸ்வரர்க்கு மம்பிகைக்குஞ் சண்முகற்கும்
நீதியாய்ப் பூசையது நீசெய்து—சத்தியமாய்ப்
பாக்கள விருநேரம் பண்பாகக் கொண்டுவர
நோக்கிச்செல்லும் வியாதிதனை நுகரக்கேள்-சாக்கியமாய்ப்
பித்தமது நாற்பதும்போம் பெலத்த கிராணியும்போம்
பத்தமில்லாச் சோகை பறந்தோடும்—சித்தர்களின்
பாதம் வணங்கிப் பகர்ந்தே னுலகோர்க்குச்
சாதகமாய்ப் பண்டிதர்கள் தாம்பிழைக்க—ஓதியதோர்
லேகியத்தின் பெருமை நோயாளியே யுணர்வான்
சாதகமாய்க் கண்டு செய்வாய் தான். 135

## ஞானவிர்த்தி.

பண்ணுவது பெரியோர்க்குப் பாதபூசை
பரிவாகச் செய்தவர்கள் மனம்பூரித்துக்
கன்னல்மொழி மாதுமையா ளருளுண் டாகக்
கருணையுட னவர்களுப தேசம் பெற்றுச்
சொன்னமொழி தவறுமனி லையி னின்று
சூட்சாதி சூட்சமெல்லாஞ் சுருதி யாய்ந்து
விண்ணவர்கள் கொண்டாடப் போகத் தூற்று
வேதாந்த நாயகியை விரைவில் காணே. 136

காணவென்றால் வாசிவச மாக வேண்டும்
காசினியிற் றலங்களெல்லாங் காண வேண்டும்
தோணாத சூட்சமெல்லாந் தோண வேண்டும்
சொன்னதுபோல் வாசிதொழில் செய்ய வேண்டும்
நாணாம லின்பதுன்பஞ் சரியென் றெண்ணி
நானிலத்தோ ருனைக்கண்டால் மதிப்பு மெய்தக்
கோணாமல் ஞானமது கொழுந்தோடிப் படரும்
கோதையர்மே லாசைவிட்டுக் குருபரனை நாடே. 137

நாடுவது மொருமனதாய் நடனஞ் செய்யும்
நாயகத்தை நன்னினைவாய் நாடி யேதான்
காடென்றும் வீடென்று மலைக ளென்றும்
கழிநதிகள் சுனைதோறுந் தலங்க ளென்றும்
பாடுபட்டு மனமலைச்சல்பட் டுழல வேண்டாம்
பாழ்மனதை யோர்மனதாய் நிலையில் வைத்துக்
கூடுதனைச் சுமந்தலைக்கும் பரம நாதன்
குருபரனை யனுதினமுங் கூர்ந்து நோக்கே. 138

நோக்கியிந்த வுடலுயிரை யறிந்தா யாகில்
நொடிக்குமுன்னே யஷ்டசித்தி கைக்குள் ஞானம்
பாக்கியவான் நீயாவாய்ப் பரமு மாவாய்
பத்தர்முத்தர் சித்தரையும் பார்ப்பா யோகம்
வாக்கில்வரும் பொருளெல்லாந் திரம தாகும்
மனவாக்குக் கெட்டா மௌனம்வாய்க்கு மாய்கை
நீக்கியுனைக் கண்டாலும் விலகி யோடும்
நிராதாரப் பெருவெளியாம் விண்ணைப் பாரே. 139

விண்ணென்று லகாரமடா மேவிப் பாரு
விளங்குபஞ்ச பூதமதி லொடுக்கம் பாரு
மண்காற்று நெருப்புசலம் வெளியோ டைந்தும்
மாபூதம் தனியாகத் தொண்ணூற் றாறும்
திண்ணமுடன் கருவிகர ணாதி யெல்லாம்
தேவர்முதல் மானிடர்க்குஞ் சேர்ந்தொன் றாகும்

நன்மையாகச் சேர்த்தரைக்க நல்லசாஸ்தி ரங்களாய்
எண்ணமிட்டுக் கவலைகொள்ளா திம்மருந்து செய்துகொ
கன்னமிட்ட கள்வர்போல எண்ணமிட்டுப் பற்றிநிற்கும்|ள்
வின்னப்பட்டு வியாதியெல்லா மெய்யைவிட்டு ஓடுமே.

ஓடுதற்குத் தாயைப்போற்றி யுன்னகத்திற் பூசைசெய்
வாடிடாதே யப்பனே மனதுள்ளே பணிந்துகொண்டு
பாடுபட்ட மெழுகதைப் பகரும்போது பத்தியம்
பகருகின்ற கடுகுமஞ்சள் மச்சம்வற்றல் திலதநெய்
சாடுபிரம பத்திரம் சனியன்மாயை மதுவொடு
போதுநீக்கி நீயருந்தப் பிணிகளா லுழன்ற ஆவி
கூடுவிட்டுப் போனஜீவன் மீண்டுவந் துடல்புகும்
தோடணிந்த வீசர்பர்தம் தொண்டுசெய்து கண்டுகொள்.

கண்டுகண்டு தேருதற் காசான் வேண்டும்
பண்டுசெய்த நல்வினையு மீள வேண்டும்
பண்பான ராசியொடு கிரகம் வேண்டும்
தொண்டுசெய்து பெரியோரைப் பணியவேண்டும்
துஷ்டருட நேசத்தை நீக்க வேண்டும்
வண்டுநிகர் குழல்மாது வாலாம்பிகைப் பெண்
வாஞ்சையற்று நீதவங்கள் பண்ணு பண்ணே. 131

## திரிமூர்த்தி தீபம்.

பண்ணிப்பார் மாமரத்தின் படிகங் கேளு
பலமொன்றும் கடிதடத்துக் கிறைவனவ் வாறு
கண்ணிழந்த பகவானும் புஜண்ட ரோசை
கத்திவெட்டுக் காரனந்த னிடையே றுகன்
எண்ணியே பசும்பாலில் மூன்றுந் தம்பி
எடுத்துக்கொள் பலமொன்றுய்ச் சேர்த்த ரைத்துப்
புண்ணியமாய்த் திரிமூர்த்தி தீபங் காட்டில்
போகாத நோயெல்லாம் போகும் பாரே. 13[illegible]

நோய்போக இன்னமொரு விரங் கேளு
நுணுக்கமாய்த் திரிமூர்த்தி தீபம் போடு
காய்மாறிக் கனிந்தபழம் போலே யப்பா
கசடறவே நோய்களையுஞ் சண்ணுஞ் சண்ணும்
தாய்ப்பாலைக் காணாத சேயைப் போலத்
தளர்ந்துவிடும் நோயினுட வலிவு தானும்
பேய்பூதம் பில்லிமுதல் சகல ரோகம்
புகைபட்டால் போகுமடா கண்டு தேரே. 133

ஜலதோஷங்களுக்கு வெங்கார மாத்திரை.

வெண்பலித்திடு டங்கணத்தரை வேகபூரிய தேகமாய்ப்
பெண்ணுரைத்திட ரக்கரித்திவம் பேசுமுந்திய திரட்டியாம்
கண்கவர்ந்திடு விருசகண்டமரை கடியமாடநிறை சுட்கமாய்ச்
சண்ணுமேசுர வாததோஷமல சகலரோகஅஜவியாக்கிரமே.

கேசரிக்காய் லேகியம்.

ஆதிசிவன் வேதன்விஷ்ணு ஐவர்பதம் போற்றி
மேவியெனை யீன்றெடுத்த மேன்மையாள்—சோதிமயம்
அம்பிகையாள் பாதமதை யன்பாய்த் துதித்தேத்தி
நம்புபோர் லேகியத்தை நாட்டக்கேள்—வம்பில்லா
அம்பிகையாள் தன்னுடை யருங்கனியிற் சதமும்
நம்பிக்கை யாய்ப்பிழிந்து நாட்டக்கேள்—சம்பிரமதாய்க்
காண்டம் வடிகட்டிக் கல்மிஷமெல் லாம்போக்கித்
தாண்டவனார் சர்க்கரையைத் தான்கலந்து—ஐந்துபலம்
வலிய அடுப்பேற்றி வகைஜாதி யோர் விறகால்
சலியாம லேபாகு தான்சமைத்துப்—பொலிவான
கடையின் சரக்கைக் கணக்கா யுரைக்கக்கேள்
படியினுளோர் கொண்டாடும் பார்மிளகு—துடியாக
நஞ்சீ ரகமிரண்டும் நாடும் பலமாகும்
பொற்கோஷ்டம் சுக்கு புகழ்பெரிய—கற்கம்
திப்பிலியுந் தாளிசமுஞ் சேர்ப்பாய் வகைக்குவகை
தப்பிதமே யில்லாமற் சாற்றக்கேள்— திக்கெனவே

விராகனெடை யாமேவுஞ் சாதிக்கா யதுவும்
வாரு யுரைத்தபடி வாங்கியே—வேதம்
ஜாதிபத் திரியுஞ் சமசமமாய் வாங்கிப்
பொன்போல் வறுத்ததனைப் பொடிசெய்து—சீலைதனில்
வடிகட்டிக் கொண்டு வைத்துமது ரச்சரக்கைத்
தனியாக வேபொடித்துத் தான்கூட்டித்—துடியாகப்
பாகத்னிற் றூவிப் பற்றும லேகிண்டி
வேகமுடன் கீழிறக்கி வெண்சாரை—நெய்யதனைத்
தாகமா யைந்துபலம் தான்விட்டுக் கிண்டியதைக்
கேவலமென் றெண்ணாதே கேள்மகனே—ஓதுகிறேன்
ஆதிவிக் நேஸ்வரர்க்கு மம்பிகைக்குஞ் சண்முகற்கும்
நீதியாய்ப் பூசையது நீசெய்து—சத்தியமாய்ப்
பாக்கள விருநேரம் பண்பாகக் கொண்டுவர
நோக்கிச்செல்லும் வியாதிதனை நுகரக்கேள்-சாக்கியமாய்ப்
பித்தமது நாற்பதும்போம் பெலத்த கிராணியும்போம்
பத்தமில்லாச் சோகை பறந்தோடும்—சித்தர்களின்
பாதம் வணங்கிப் பகர்ந்தே னுலகோர்க்குச்
சாதகமாய்ப் பண்டிதர்கள் தாம்பிழைக்க—ஓதியதோர்
லேகியத்தின் பெருமை நோயாளியே யுணர்வான்
சாதகமாய்க் கண்டு செய்வாய் தான். 135

## ஞானவிர்த்தி.

பண்ணுவது பெரியோர்க்குப் பாதபூசை
பரிவாகச் செய்தவர்கள் மனம்பூ ரித்துக்
கன்னல்மொழி மாதுமையா ளருளுண் டாகக்
கருணையுட னவர்களுப தேசம் பெற்றுச்
சொன்னமொழி தவறும னிலையி னின்று
சூட்சாதி சூட்சமெல்லாஞ் சுருதி யாய்ந்து
விண்ணவர்கள் கொண்டாடப் போகத் தூற்று
வேதாந்த நாயகியை விரைவில் காணே. 136

காணவென்றால் வாசிவச மாக வேண்டும்
காசினியிற் றலங்களெல்லாங் காண வேண்டும்
தோணாத சூட்சமெல்லாந் தோண வேண்டும்
சொன்னதுபோல் வாசிதொழில் செய்ய வேண்டும்
நாணம வின்பதுன்பஞ் சரியென் றெண்ணி
நானிலத்தோ ருனைக்கண்டால் மதிப்பு மெய்தக்
கோணமல் ஞானமது கொழுந்தோடிப் படரும்
கோதையர்மே லாசைவிட்டுக் குருபரனை நாடே. 137

நாடுவது மொருமனதாய் நடனஞ் செய்யும்
நாயகத்தை நன்னினைவாய் நாடி யேதான்
காடென்றும் வீடென்று மலைக ளென்றும்
கழிநதிகள் சுனைதோறுந் தலங்க ளென்றும்
பாடுபட்டு மனமலைச்சல்பட் டுழல வேண்டாம்
பாழ்மனதை யோர்மனதாய் நிலையில் வைத்துக்
கூடுதனைச் சுமந்தலைக்கும் பரம நாதன்
குருபரனை யனுதினமுங் கூர்ந்து நோக்கே. 138

நோக்கியிந்த வுடலுயிரை யறிந்தா யாகில்
நொடிக்குமுன்னே யஷ்டசித்தி கைக்குள் ஞானம்
பாக்கியவான் நீயாவாய்ப் பரமு மாவாய்
பக்தர்முத்தர் சித்தரையும் பார்ப்பா யோகம்
வாக்கில்வரும் பொருளெல்லாம் திரம தாகும்
மனவாக்குக் கெட்டா மௌனம்வாய்க்கு மாய்கை
நீக்கியுன்னைக் கண்டாலும் விலகி யோடும்
நிராதாரப் பெருவெளியாம் விண்ணைப் பாரே. 139

விண்ணென்று லகாரமடா மேவிப் பாரு
விளங்குபஞ்ச பூதமதி லொடுக்கம் பாரு
மண்காற்று நெருப்புசலம் வெளியோ டைந்தும்
மாபூதம் தனியாகத் தொண்ணூற் றாறும்
திண்ணமுடன் கருவிகர ணாதி யெல்லாம்
தேவர்முதல் மானிடர்க்குஞ் சேர்ந்தொன் றாகும்

நன்னயமா யிருவர்க்கு முடல்வித்தி யாசம்
நான்சொல்வேன் விவரமதை யறிந்து கொள்ளே. 140

கொள்ளவே ஸ்தூலமென்றுஞ் சூட்ச மென்றும்
கூறுவார் சாஸ்திரங்கள் குணம்வே றாகக்
கள்ளமில்லாச் சூட்சவுடல் தேவர் தேகம்
கனமான ஸ்தூலவுடல் மனிதர் தேகம்
விள்ளவென்றால் தத்துவநூல் பரிசோ தித்து
வேதாந்த ஆசானை யடுத்துக் கேட்டால்
தெள்ளமுதம் போலவவர் தெளிவாய்ச் சொல்லிச்
சிந்தைதனி லுள்ளவெல்லாந் தெரிவிப் பாரே. 141

தெரிந்துகொண் டதன்வழியிற் செலுத்திச் சிந்தை
திடம்பெற்று மௌனமுற்றுத் தேசி யேறிச்
சரியென்று மதியதனை ரவியிற் சேர்த்துச்
சாயுஜ்ய பதமறியத் தவவேடம் பூண்டு
நரிதந்திரம் பரிவேகம் நயந்து கொண்டு
நாராசமென்ற மேல்வாசல் வழியைக் கண்டு
தரியலர்க ளென்றபகை வேரைக் கெல்லித்
தாய்பதத்தை யெந்நாளுந் தனித்துப் போற்றே. 142

தனித்திருவென் றுனக்குரைத்தேன் மகனே கேளு
சங்கைநங்கை யற்றுமனம் தனிவே றாமுக்
கனிரசம்போ லினித்தறிவை மேலே நோக்கிக்
கசடுற்ற தத்துவத்தைவே ரறுத்துக் கீழாய்ப்
புனிதமுள்ள வறிவதின்சொல் மனமதுதான் கேட்கப்
போதத்து அவிவேகப் பூட்டதனை யுடைத்துப்
பனிபறக்கும் வாறதுபோல் மனச்செயலைக் கெடுத்துப்
பருதியென விவேகமதைப் பாவித்துப் பணியே. 143

## ஞானம்—சிவவாக்கியம்.

பணியபூசை செய்புமென்ற பான்மையை யறிந்திலீர்
கணியவே மனதுருகிக் காணவேணு மறிவதைத்

திணியவே திடத்துடன் சிவனையறிந்த வேளைவிட்டுச்
சனியனுன மாய்கையும் தலைதெரிந்து ஓடுமே. 144

ஓடுமே வினைகளெல்லா முடலைவிட்டு அப்புறம்
காடுமே சுற்றிசுற்றிக் கண்கலக்கப் படுவதேன்
வீடுவிட்டு வெளியருத விமலியை யறிவிரால்
பாடுபட்ட கூலியும்மை பலிதமென்று காணுமே. 145

காணலாகுந் தாயையும் கருத்தைதயுள் ளிருத்திஞல்
பூணலாகு மஷ்டசித்தி பொன்னுலக போகமும்
தோணலாகு மஷ்டதிக்கு சோடச திசைகளும்
வேணலாப முங்கிடைக்கும் மெல்லிபூசை கேளுமே. 146

## சத்திபூசைச் சக்கரம்.

கேளடா வென்தாயார் பூசை தானும்
கேவலமே யல்லவடா கெட்டி கெட்டி
நாளடா வறுகோணங் கணக்காய்க் கீறி
நன்மைபெற வதின்மேலே வட்ட மிட்டுச்
சூளடா பதினறு இதழு மிட்டுச்
சொகுசுபெற வறுகோண மத்தி தன்னில்
வேளெரித்த சிரம்போலங் கோண மிட்டு
விதமாக மேல்வளைய மிதழ்பனிரெண் டாமே. 147

ஆமடா ஐங்கோண மத்தி தன்னில்
அடைவாக வட்டமிட்டுத் திரிகோண மிட்டு
நாமடா திரிகோண மையந் தன்னில்
நலம்பெறவே விந்திட்டு ஏகம் போட்டுத்
தாமடா மேல்கீழும் வாலை பீசம்
தனைவரைந் தைங்கோண மதனிற் கேளு
போமடா பஞ்சகர்த்தர் தம்மை நாட்டிப்
புகழ்பெறவே யறுவரையு மதன்மேல் நாட்டே. 148

நாட்டுவாய் மேல்வளைய மூன்று மிட்டு
நலமாகப் பூரணையா யிதழை நாட்டிப்
பாட்டிலுள்ள படியேதா னைம்பத் தொன்றும்
பக்குவமா யிதழதனில் எழுத்தைப் போட்டுக்
கோட்டையது போலாக மூன்றுவரை கீறி
கோணமல் வாயிலது நான்கும் விட்டுத்
தேட்டமுட னஷ்டகஜ மஷ்ட நாகம்
தீவிரமாய்ப் பாலரொடு தெரிந்து நாட்டே. 149

தெரிந்திடவே பஞ்சபட்சி பஞ்ச மூலம்
தேகமென்ற அஷ்டசத்தி வடுக னெட்டும்
பொரிந்திடுவாய் நாற்புறமும் கணபதியுங் கந்தன்
புகழ்பெரிய சண்டிகேசன் தட்ச ணையன்
சொரிந்திடுவா யவரவர்கள் பீசந் தன்னைச்
சோர்வுபடாக் கிரந்தவட் சரத்தா விட்டுத்
தரித்திடவே யந்திரமோ தகடு தங்கம்
தண்மைபெற மூலவகை சாற்று வேனே. 150

சாற்றுகின்றே னெனையீன்ற வாமி வாலை
சாம்பவியாந் திரிசூலி மகிடற் காய்ந்தாள்
காற்றினிலு மதிவேக மாய ரூபி
காணவென்றால் மாற்றுயர்ந்த தங்க மேனி
போற்றிடுக்குஞ் சடமெல்லா மவளே யல்லால்
பின்னையொன்று மில்லையில்லை பேணிப் பாரு
கூற்றுவன்றன் கொடுமைதனைக் கெடுப்பா ளாத்தாள்
குணமுடையோர் தங்கள்குல தெய்வங் காணே. 151

காணவே திறவுகோல் முப்பதுங் கரிசற்காகும்
கன்னியுட மூலமுதல் கருவெல்லாங் காணும்
தோணவே கொங்கணவர் நடுக்காண் டத்தில்
தொகைவிவரஞ் சக்கரத்தி னுணுக்கஞ் சொல்வார்

ஆணவத்தை யொழித்துவா சானைக் காத்தால்
அவர்சொல்வார் யந்திர வடக்கம் ராம
பாணம்போல் பாடிவைத்தேன் கரிசல் தன்னைப்
பாருலகில் நூற்றைம்பத் தொன்று முற்றே. 152

பூகிமுனி கரிசல் - 151
**முற்றுப் பெற்றது.**

---

இந்த நூற்பிரதி செங்கல்பட்டு
சுரோத்திரியதார் - சித்தவைத்தியர்
**ஸ்ரீமான் சுப்பிரமணிய முதலியார் அவர்களால்**
உலோகோபகாரமாக அச்சியற்றி வெளியாக்குமாறு
கொடுத் துதவப்பட்டது.

---

# யூகிமுனி கரிசல்—151

## விஷய அட்டவணை.

---

உ

அகஸ்திய மகாமுனிவர் திருவாய் மலர்ந்தருளிய

### ஷண்முக ஜாலம் என்னும்

# சர்ப்பராஜக் குளிகை-43.



1. சித்தனு யிருப்பதற்கு இன்னங் கொஞ்சம்
செப்புகிறேன் மாத்திரையின் பெயரைக் கேளு
அத்தனு ரெனக்குரைத்தார் சர்ப்ப ராஜன்
அவனியிலே உனக்குரைத்தேன் மச்சகேந்திரா
மத்தகஜம் தனைப்பிளக்கும் சிம்மந் தன்னை
மாரணஞ்செய் பகையொத்த சாபந் தன்னை
எத்திசையு மிவர்நாமங் கேட்ட போதே
ஏகுமடா சிங்கமொத்த நோய்கள் தாமே.

2. தானென்ற மாத்திரைதா னுலகி லுண்டோ
தாரணியில் நடப்பில்லை தவத்தோர்க் கெய்தும்
தேனென்ற வ்டமொழியில் தெளிந்து பார்த்துச்
செப்பினேன் பதினாயிரந் தன்னில் மைந்தா
கோனென்ற அரனைப்போ மாத்திரையை யுண்டால்
கொடியதொரு காலனுமே யுன்பேர் சொன்னால்
வேனென்று பொறிகலங்கித் தூரச் சென்று
விரைந்தோடு மவன்பதிக்கு வெல்லொ ணாதே.

3. வெல்லவே மாத்திரையின் மருந்தைக் கேளு
வீரான சவ்வீரம் கௌரி தொட்டி
அல்லவே குதிரைப்பல் உருக்குத் தொட்டி
அடைவான தாம்பிரத்தின் தொட்டி யோடு
சொல்லவே வெள்ளையுடன் மாவெலியுங் கூடச்
சுருக்கான தீமுருகல் கார்முகியுங் கூட

இல்லவே மூங்கிலுட பாஷா ணந்தான்
என்மகனே யிருநாபி நிர்விஷமு மாமே.

4. ஆமேதான் கெந்தியுடன் ஜாதி லிங்கம்
அடுத்ததொரு மால்தேவி ஊசி காந்தம்
நாமேதான் சொல்லுகிறோம் சிலையும் சிங்கி
நன்றான கற்பூரம் இரசகற் பூரம்
தாமேதான் துத்தமொடு துருசுங் கூடச்
சாற்றுவார் நவாச்சாரம் அன்ன பேதி
வேமேதான் சூதமுடன் வாள மோடு
வீறான வெட்டிவித்து சேங்கொட்டை காணே.

5. காணவே காரமுடன் சீனங் கூடக்
கடிதான கல்லுப்பு இந்துப் போடு
பூணவே வளையலுப்பு கரியுப் போடு
பேறான வெடியுப்பு அஞ்சுங் கூடத்
தோணவே எவாச்சாரம் சத்திச் சாரம்
சொற்பெரிய சவுக்காரம் பூநீ ரோடு
ஆணவே மருந்துதான் நாற்பத் தொன்றும்
அப்பனே சுத்திசெய்து வேறே வையே.

6. வைத்ததொரு மருந்துடனே சரக்குக் கேளு
மைந்தனே திரிகடுகு திரிப லாதி
நைத்ததொரு அபினியுடன் பெருங்கா யந்தான்
நன்றான வால்மிளகு அரத்தை யேலம்
கைத்ததொரு கருஞ்சீ ரகம்கார் போகம்
கடிதான அக்கிரா காரம் கோஷ்டம்
வெற்றிபெறும் குங்குமப்பூ மகரப் பூவும்
மேலான அதிமதுரம் லவுங்கமு மாமே.

7. ஆமேதான் ஜாதிக்காய் ஜாதி பத்திரி
அப்பனே யிருவேலி விலாமிச் சாரும்
ஆமேதான் சந்தனமும் தேவ தாரம்
அகிலுடனே சிறுநாகப்பூ முந்திரியுங் கூட

ஆமேதான் குமேராசாணி தாளிச்ச பத்திரியும்
அதிவிடயம் கல்நார் வசுவாசி யோடு
ஆமேதான் மஞ்சிட்டி வெப்பாலை யாகும்
ஐங்கோல வித்துடனே முத்தக் காசே.

8. வித்தான அவுரிவித்து சூரி வித்து
முக்கியமாய் வாலுளுவை வாகை வித்து
சித்தான கொல்லனுட கோவை வித்து
சிறந்ததொரு அமுர்தவல்லி வித்துங் கூட
மித்தான கஸ்தூரி கோரோ சனையுங்கூட
மிகுந்ததொரு சமுத்திரா பழமோ டொக்கக்
கத்தான சிறுதேக்கு செவ்வியம் பாசி
கடல்நுரையும் கல்மதமும் கடலீ ருஞ்சே.

9. அஞ்சான மரமஞ்சள் கஸ்தூரி மஞ்சள்
அப்பனே சாஸ்திரமாம் பேதி யோடு
தஞ்சான வாய்விளங்கம் வலம்புரியோ டொக்கச்
சார்வான விருசீரகமும் பேரீச் சோடு
நஞ்சான கார்த்திகையின் கிழங்கு மாகும்
நன்னாரி கொடிவேலி சுருளி யோடு
மிஞ்சாமல் சரக்குவகை யறுபத்து நாலும்
மீறாமல் வகைதனக்கோர் கழஞ்சு வாங்கே.

10. வாங்கியே மருந்தெல்லாம் யிடித்துத் தூளாய்
மைந்தனே கல்வத்தி லாட்டக் கேளு
தூங்கியே திரியாமல் முன்சுத்தி செய்த
சுகமாக முன்மருந்தையுமே யுறவு செய்து
தாங்கியே கல்வத்தி லரைக்கக் கேளு
சார்வான பருத்தியிலைச் சாற்று லப்பா
சாங்கமா யஞ்சுநா ளரைத்துப் பின்னும்
தகரஇலைச் சாற்றிலுமவ் வீத மாமே.

11. ஆமப்பா கொடுப்பைச்சார் அஞ்சு நாளாம்
அப்பனே மேனிச்சார் அந்த வீதம்

நாமப்பா சொல்லுகிறோம் கீழ்க்காய் நெல்லி
 நன்றான சார்தன்னி லஞ்சு நாளாம்
தாமப்பா மிளகினுட கியாழத் தாலே
 தப்பாதே அஞ்சுநா ளரைத்துப் பின்னும்
வாமப்பா மிலாக்காய்க் கியாழம் விட்டு
 மைந்தனே வகையாக ஆட்டு வாயே.

12. ஆட்டுதற்குச் சீரகத்தின் கியாழ மப்பா
 அப்பனே முன்போல அஞ்சு நாளாம்
தீட்டுதற்கு இஞ்சிச்சார் அந்த வீதம்
 திரமாக நீயரைப்பாய் கையோ யாமல்
மாட்டுதற்கு மண்டலந்தான் அரைப்பு மாச்சு
 மைந்தனே இனிசொல்வேன் பாகந் தன்னைக்
கூட்டுதற்கு மருந்துதன்னை வழித்து நீயும்
 குறும்பரே சிறுபய ருண்டை யாக்கே.

13. ஆக்கவே குளிகைதன்னை நிழலு லர்த்தி
 அப்பனே கணபதிக்கும் குமார னுக்கும்
வாக்கவே வைரவர்க்கும் பூஜை செய்து
 வளமாகத் தீபமொடு தூபங் காட்டி
நோக்கவே நோயதற்கு ஈயக் கேளு
 நொடிக்குமுன்னே பேதிக்கும் நோய்க ளப்பா
பாக்கவே அணுவளவு வைத்துப் பாரு
 பண்பான சரபருட மகிமை கேளே.

14. கேளப்பா மன்னனுடன் வாது பேசி
 கெடுசொல்லித் தீர்ப்பதுதா னிதுவல் லாமல்
நாளப்பா ஆயிரத்தி யிருநூற் றுக்குள்
 நன்றான ஜாமத்தி லிரண்டாங் காண்டம்
தேளப்பா கொட்டுதல்போல் கோடா சூழி
 திறந்தமுன் றதிலே ராஜ குலாந்தன்
வாளப்பா நாலதிலே பகிரதியாந் தைலம்
 வாகாகச் சொல்லிவிட்டேன் குருநூலில்தானே.

15. தானான நூலெல்லாம் சொல்லி வைத்த
சார்வான மாத்திரைக ளிதற்கீ டுண்டோ
வேனான மாத்திரைக ளெல்லா மப்பா
மேலான மாத்திரைதான் சர்ப்ப ராஜன்
பானான அறுநூறில் தளசிந் தூரம் [னேன்
பகர்ந்தமுப்பத் தாறினிலே பூபதியும் சொன்
கோனான சர்ப்பனவ னிவர்கட் கெல்லாம்
கூறியதோ ரிறையாச்சு கூர்ந்து பாரே.

16. பாரப்பா புலத்தியனே சொல்வேன் கேளு
பராராஜ சர்ப்பனிட பராக்ர மத்தை
நேரப்பா ரோகமது கண்டு பார்த்து
நீவிடுவாய் சர்ப்பமது நிமிஷம் தாக்கும்
ஆரப்பா வுலகினிலே ரோகமா னவர்க்கு
அப்பனே யிவரிருக்கில் மரண மில்லை
வேரப்பா வேதவிதி முடிந்த தென்றால்
வீணான பிணியெய்தும் விழலா வாரே.

17. விழலாகும் ரோகமது விரித்துச் சொல்வேன்
விமலனார் சொன்னவனு பானமுறையோ டப்பா
தழலான சுரமென்ற அறுபத்து நாலும்
தான்பறக்கும்கடிகையொன்றில்வகையைக்கேளு
அழலான திரியுருட்டித் தீபம் வைத்து
அப்பனே பார்த்திருக்க ஜுரமெங்கே போச்சு
சுழலான வாய்வோடு பிடிப்பு சூலை
தொகையும்நூற் றெட்டப்பா சூட்டக் கேளே.

18. சூட்டக்கேள் அகலிலப்பா தணலை வாரித்
துடிப்பான மாத்திரையில் மூன்று போட்டு
மூட்டக்கேள் புகையெல்லா மேலே யேற்று
முக்காடு போட்டவனை யிருக்கச் சொல்லு
மாட்டக்கேள் புகையெல்லாம் நின்ற பின்பு
மைந்தனே குளிர்ந்தஜலம் முழுகச் சொல்லு

கூட்டக்கேள் தயிரும்சோ றுண்ணச் சொல்லு
குறும்பரே பத்தியமொன் றில்லை தானே.

19. தானென்ற ஜாமமதில் சூலை யெங்கே
தருக்கிநின்ற வாய்வெங்கே முடக்கு மெங்கே
ஊனென்ற உட்காய்ச்சல் கடுப்பு மெங்கே
ஓயாத வலியெங்கே வீக்க மெங்கே
நானென்ற ஜன்னி நாற் றெட்டி னோடு
நாசமற்ற தோஷமஞ்சும் நாடா தோட
மூனென்ற ஜுரந்தனக்குச் செய்த விதம்
முறைப்படியே தீபம்வைத்துப் பார்த்தி டாயே.

20. பார்த்திடவே தோஷமஞ்சும் ஜன்னி நாற் றெட்டும்
பறக்குமடா சடிகையொன் றில் சர்ப்பங் கண்டால்
தீர்த்திடவே ரோகமது கண்டு கண்டு
தின்பதற்குப் பிரியமென்ன வென்று கேட்டு
ஏர்த்திடுவாய் குளிகையொன்று பதார்த்தந் தன்னில்
என்னசொல்வேன் ரோகமது இருக்கு மோசொல்
பூர்த்திடவே அநுபானந் தன்னிற் கொள்ளப்
பூட்டுகிறேன் மேகத்திற் கேதுவாய்த் தானே.

21. தானென்ற ரோகமது இருபத்து நாலில்
தணியாத மேகமப்பா தீர்மே கந்தான்
தீனென்ற இரையாகத் தின்று போடச்
செப்புகிறே னனுபானம் திறமாய்ப் பாரு
மூனென்ற முசுட்டையுட சாறு தன்னில்
மூவேளை மூன்றுண்டை மூட்டிப் பாரு
கானென்ற கடல்வற்றி யிரத்த மூறிக்
கனகம்போ லாகுமப்பா கண்டு பாரே.

22. கண்டுபார் பிறைமேகம் தீர வென்றால்
கருதுவோ மாவின்பால் தன்னி லோர்நாள்
விண்டதொரு நூல்மேகந் தீர வென்றால்
விரைமிகுந்த தாழம்பூச் சாற்றி லோர்நாள்

தூண்டுதூண்டாய்ச் சடைவளர்ந்து அடைக்கு மேகம்
ஞூரிவோர் கியொழுத்தி லோர்நாள் கொள்ளு
கொண்டதொரு சீழ்மேகம் ரத்த மேகம்
குணமாகும் பருத்திக்காய்ச் சாற்றி னாலே.

23. நாளான நாள்போக்குங் கொடிய காசம்
நாசமுறும் மூவேளை மேனிச் சாற்றில்
கோளான க்ஷயமெட்டும் போக வென்றால்
கூறுவே னனுபான மொன்று லப்பா
ஆளான தூதுவளைப் பொடியி லப்பா
ஆடியாக மூவேளை கொடுத்துப் பாரு
பாளான பிணிசந்தா னெட்டுந் தீரப்
பகருகிறேன் கையான்சார் மூவேளை யாமே.

24. கையான்சார் காமாலை சோகை பாண்டும்
கண்டித்த மகோதரமும் பெருவயிறு டஞ்சும்
மையான கருவிழுதிச் சாற்றி லப்பா
மைந்தனே மூவேளை கொடுத்துப் பாரு
மெய்யான ஆம்பலொடு கவுச்சை வெப்பு
விஷமான பாண்டுவுக்கு முன்பா கந்தான்
தையான வேளையுட சாற்றி லப்பா
சண்டாள விஷமனைத்து மொழிந்து போமே.

25. போமப்பா பிசாசுகணம் பூதந் தூர்க்கை
புண்ணியனே பல்பூட்டு மூர்ச்சைக் கெல்லாம்
நாமப்பா நாகமல்லிச் சாற்றில் சற்றே
நாட்டிவிடு நயனத்தி லணுப்போ லப்பா
தாமப்பா இனியெங்கே செல்வோ மென்று
தட்டழிந்து பூதகணம் சரணம் செய்யும்
வேமப்பா பிளவையொடு ஆணிப் புற்று
வீறான மார்பாணி நெற்றி யாணி.

26. ஆணியென்ற இதுவல்ல இன்னங் கேளு
அப்பனே கண்டத்தின் மாலை யோடு

பிணியே ஆறுவகை மூல மெல்லாம்
    பேரான பவுத்திரந்தா ளுறுங் கூடப்
பேணியே பதினெட்டும் தீர்ப்ப தற்குப்
    பேசுகிறே னனுபான மொன்ற தாக
வாணியே யுரைத்ததொரு பாங்கிப் பட்டை
    மகத்தான கியாழத்தில் நேர மூன்றே.

27. மூன்றான ரோகமப்பா நாசி ரோகம்
    முக்கியமாய்ப் பீடையது மூன்றும் போகக்
கோன்றனே உரைத்ததனை மேனிச் சாற்றில்
    கொடுத்திடுவாய் குளிகையொன்று நசியமாக
மான்றனே தாவினுப்போ லறுத்துத் தள்ளும்
    மண்டையிலே சூலையுண்டோ மைந்தா பாரு
தோன்றாத ரோகமெல்லாம் துலைதூ ரந்தான்
    சொல்வதற்கு எண்ணிமனம் துணிந்த வாறே.

28. வாறான கழலையப்பா தீரக் கேளு
    மைந்தனே கருங்காலிச் சாற்றி லாகும்
நூறான வருஷமது இருந்த ரோகம்
    நோக்குமடா பகல்பொழுதில் கண்கா ணாது
வேறான ஆப்பதுதா னைந்துந் தீர
    விள்ளுகிறேன் நாய்சார் நாள் தானும்
வீறான வலிப்பஞ்சும் போக வென்றால்
    வெண்நொச்சிச் சாறப்பா கடிகை யொன்றே.

29. ஒன்றான பித்தத்தா லெடுத்த ரோகம்
    எத்தனையென் றறிவிப்பேன் சுருவில் கேளு
பன்றான முசுமுசுக்கைச் சாற்றி விட்டால்
    பறக்குமடா கடிகையொன் றில் பித்த மூச்சு
நன்றான ரோகமது கண்டு கண்டு
    நடத்துவாய் ராஜனைமீ யனுபா னத்தில்
சென்றாடும் சிலேத்துமந்தான் தொண்ணூற் றாறும்
    தீருமடா திப்பிலியின் சூரணமு மாமே.

30. ஆமேதான் அஷ்டகுன்மம் பீலி கைக்கு
அப்பனே மூன்றுநாள் கொடுக்கக் கேளு
நாமேதான் சொல்லுகிறோம் சித்திர மூலம்
நன்றான கியாழத்தில் நாட்டப் போகும்
சாமேதான் குட்டமொடு பதினெட் டுக்கும்
சார்வாகக் காஞ்சொரியி லேந்து நாளும்
போமேதான் கரப்பான்முத லைம்பத் தாறும்
போவதற்குப் புகலுகிறேன் வகையாய்த்தானே.

31. வகையான பூவரசன் பட்டைச் சாற்றில்
மைந்தனே கொடுத்திடுவாய் மூன்று நேரம்
திகையான கரப்பனடா ஐம்பத் தாறும்
செல்லுமடா கடலெங்கே யென்று தேடிப்
பகையான விக்கலடா ஆறுந் தீரப்
பகருகிறேன் சிறுதேக்குக் கியாழ மாகும்
புகையான நயனத்தில் மறைக்கும் ரோகம்
புகழான தொண்ணூற்று ஆறும் போமே.

32. போவதற்கு விபரமது சொல்லக் கேளு
புண்ணியனே பழச்சாற்றில் குளிகை யிட்டு
ஆவதற்கு நயனத்தில் மூன்று வேளை
அப்பனே பிழிந்திடவே யெல்லாந் தீரும்
தாவதற்குத் தலையில்தான் மூன்றாம் நாளில்
தானிழைத்துத் தேய்த்திடுவாய் தருகொண்
மேவுதற்கு நாலாநாள் வெந்நீர் மூழ்கு; [ணது
விட்டோடும் தொண்ணூற்றாறு ரோகந் தானே.

33. ரோகமென்ன படுவந்து முதலா யப்பா
நேரான உண்ணாக்கில் சிங்கி போகப்
பாகமென்ன துளசியிலைச் சாற்றி லூட்டப்
பறக்குமடா கடிகையொன்றில் பழமை நோய்கள்
தாகமென்ன அடங்காது தீர வென்றால்
சாற்றுகிறேன் அரசிலையின் சாற்றி லூட்டு

வேகமென்ன வுள்மாந்தை யிளை நோய்க்கு
விஷ்ணுவுட மூலிவேர் கியாழத்தி லூட்டே.

34\. ஊட்டுவாய் பறகரிக்குப் பழச்சாற்றி லப்பா
ஒருநாளில் தீருமடா இந்த ரோகம்
பூட்டுவாய் ஆனந்த வாய்வுக் கெல்லாம்
பேரான அஸ்வகெந்திச் சாற்றி லாரும்
மூட்டுவர் யைந்துநாள் கொடுத்துப் பாரு
மூட்டோடே அற்றுவிடும் ஆனந்த வாயு
கூட்டோடே குடல்வலியும் போக வென்றால்
கூரான கிளாக்காயின் சாற்றி லாமே.

35\. ஆகுமே பாதசக் கரந்த னக்கு
அப்பனே குதிரையடிச் சாற்றில் பூசு
ஏகுமே கணைகாய்ச்சல் பதினெட் டுக்கும்
இயம்புகிறேன் கழற்சியிலைச் சாற்றி லூட்டு
வேகுகளை களப்பு கெந்தகாளி வாயிலப்பா
வெண்ணெயிலே குழைத்துண்ணை வெகுகுணந் [தான்
போகமே செய்வதற்குச் சொல்லக் கேளு
பேறான பறட்டையிலை ஆவின் பாலே.

36\. பாலான அதனிலேவெந் தான பின்பு
பண்பான பாலதனை யிறுத்துக் கொண்டு
மேலான சர்ப்பனிட குளிகை தன்னில்
மிகுந்ததொரு பால்தன்னில் விட்டுப் பின்னும்
வேலான போகமது செய்ய வேண்டி
விரும்பியே கொண்டிடவே யினிமேற் கேளு
கோலான ஆணுவந்தான் விம்மி யப்பா
கோஷ்டியென்ன மும்மதவா ரணம்பந் தாகே.

37\. பத்தாது பருவமின்று மாயிரம்பேர் பத்தாது
பத்தாது கலவியிலே ஜாமத் திற்கும்
வித்தான விந்துவது வுனக்கே யேறும்
வீண்போகா துனதுவிந்து கழிந்ந புக்கும்

மூக்கான மணிபோலத் திரண்டு காணும்
விருதுபெற்ற சர்ப்பனிட மகிமை யாலே
எத்திசையி லுள்ளபெண்க ளுனக்காமோ சொல்லு
எறும்படா ஏழைமின்னூர்க் கிரங்கு வாயே.

38. இரங்குவா யிதுபாவ மப்பா அப்பா
இந்நேரம் சொன்னகர்மம் அதர்ம மாகும்
மரங்களிலே குரங்கிருந்து முழிக்கி ருப்போல்
மடவார்க ளுன்காலில் விழுவா ரப்பா
அரங்குவது முன்னுமப்பா பாவம் பின்னும்
அப்பனே நினைத்திடவே மோக்ஷ மெய்தும்
துரங்கள்ரதம் சேனைபரி காலா ளோடும்
சுத்தபில னுன்றனுக்கு மசகந் தானே.

39. தானென்ற தேகமது வலுவோ மெத்த
தாணியிலே யெவருனக்கு ஈடு செய்வார்
கோனென்ற ஈசனப்பா சொன்ன வித்தை
குமாரகுரு பரமுருகன் கிருபை யாலே
நானென்ற ஆணவத்தால் சொன்னே னப்பா
நாதாக்கள் கோபமுற்றுச் சினத்தி னாலே
மானென்ற திருமூலர் அய்யர் வாங்கி
வைத்தாரே குகைதனிலே பதன மென்றே.

40. பதனமென்ற அய்யர்தன்னைத் தொழுதி ரங்கிப்
பாடினேன் பிள்ளைகளுக் காமென்று சொல்லி
அதனமாய்ச் செய்தபிழை பொறுங்க ளென்று
அடிதொழுது தெண்டனிட்டு அய்யர் முன்பு
விதனமா யிருந்தவர்க ளிந்தா வென்ன
வெகுளியாய்ச் சொன்னதொரு நூலை யப்பா
மதனுக்கு இப்படிநீர் சொல்லப் போமோ
மகத்தான நூலிதென்று ஈந்திட் டாரே.

41. ஈய்ந்திட்டார் திருமூலர் அய்யர் தாமும்
என்மகனே புலத்தியனே வுனக்கா யீய்ந்தேன்

ஈய்ந்திட்ட சர்ப்பனுட கீர்த்தி தன்னில்
ஆடவென்றால் என்றாலே கூடா தப்பா
தோய்ந்திட்ட பதினெண்பேர் சித்தர் தம்மைச்
சூக்ஷமாய்ச் சொல்லுமென்று வாயால் சொன்
ஆய்ந்திட்ட திதுபோது மப்பா சேயாம் [னேன்
மகாமுனிவர் நீருரைத்த திதுபோது மென்றார்.

42. என்றதுதான் சித்தரெல்லாம் பதன மென்று
என்மகனே சொன்னதினால் பதனம் பண்ணு
வண்டாரப்பா ரொம்பவுண்டு புவியில் தானும்
வணங்கியே பிறரோடு வகைசெய்ய சொல்வார்
தொண்டுசெய்து எய்ப்பார்கள் நூல்கொ டாதே
சொன்னேனு னறிந்திலேயா சாபம் சாபம்
அன்றுமுத லின்றுவரைச் சொன்ன சாபம்
அயர்ந்திடாது செய்கின்ற வழியைக் காணே.

43. காணப்பா ரோகத்தால் மரணம் போச்சு
கல்லாச்சு தேகமது இறுகிப் போச்சு
பூணப்பா பூவுலகில் போகம் போச்சு
பேசாதே பறைசாற்றச் சொல்லி நீயும்
வீணப்பா போகாது விருது கட்டு
வித்தையிலே வைத்யனென மேன்மை யாவாய்
வேணப்பா சர்ப்பத்தின் ராஜனுனை
மேன்மையுள்ள மாத்திரை தான் முடிவு முற்றே.

சர்ப்பராஜக் குளிகை—**43**
முற்றிற்று.

---

இந்த நூல்
சென்னை - புரசைபாக்கம் - சித்தவைத்தியர்
**ஸ்ரீமான் அங்கப்பாச்சாரியார் அவர்களால்**
உலோகோபகாரமாக அச்சியற்றி வெளியாக்குமாறு
கொடுக்கப்பட்டது.